# நூல் அறிமுகம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | **அருள் தரும் அமாவாசை வழிபாடு** |
| நூலாசிரியர் | விசு அய்யர் |
| இணை ஆசிரியர் | jvv.பொன்தாமரைக்கண்ணன் |
| முதற் பதிப்பு | 2017 |
| பதிப்பு | ஸ்ரீராம் பதிப்பகம் |
| உரிமை | The Sriraam Publication |
| பக்கம் | 72 |
| எழுத்து | 11 புள்ளிகள் |
| கணினி அச்சு | ஸ்ரீராம் பதிப்பகம்<br>The Sriraam Publication |
| வெளியீடு | ஸ்ரீராம் குழுமம்<br>கரூர் மெயின் ரோடு, கொடுமுடி<br>thesriraampublication@gmail.com<br>அலைபேசி 7667745633 |
| விலை | ரூ.70/ |

இந்த நூலை
பணம்
செலுத்தாமல்
நீங்கள்
பெற்றுள்ளவரா ?

Paytm
Accepted Here

sriraam jothida kendra

ஆம் என்றால்
அந்த பாவச்
செயலை நாம்
செய்ய வேண்டாமே

To Pay, Scan QR Code in Paytm App



India's Most Sincere Bank
Paytm Payments Bank

நூலுக்கு உரிய
தொகையை
விருப்பம் போல்
அனுப்பலாம்

Bank Account No.
286801000000995
favouring ANITHA
IFSC: IOBA0002868
அலைபேசி எண்.7667745633

# பதிப்பாசிரியர் உரை .....

இறைவன் இயற்கை வழியாக கூறும் பல விசயங்களை நம்மால் உணரமுடிவதே இல்லை. உணர்ந்தவர்களுக்கு இறைவன் சொல்லும் பல விஷயங்கள் வியப்பாகவே உள்ளது. அதை அறியும் போதும், அறிந்ததை செயல்வடிவில் பார்க்கும் போதும், இயற்கை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. இறைவனின் பேராற்றலினை அவரவர்கள் உணரும் போது தான் இந்த உண்மையும் புரிகிறது.

இந்த வகையில் இறைவனையும் இயற்கையினையும் உணர்ந்தவரானாலும், தன்னை பற்றி பெரிதாக பேசிக் கொள்ளாத ஒரு எளிமையானவர் இந்த நூலின் ஆசிரியர். இவருடன் பழக தொடங்கிய மிக சில நாட்களிலேயே இவருடைய அன்பும் இவரின் செயலும் நம்மை நல்வழிபடுத்துவதோடு, புதிய சிந்தனைகளை தூண்டி விட்டு நம்மை வளர்க்கும் என்பதை இவரின் பழக்கத்தில் உணரலாம்.

வாட்ஸ்அப் வழி அமைந்துள்ள ஸ்ரீராம் ஜோதிட குழுவில் தினம் தினம் ஒரு சிந்தனையாக அத்தனையும் சொந்தமாக சிந்தித்து (copy & paste இல்லாமல்) பதிவுகள் செய்து பல நூறு அரங்கங்களை நடத்தி, அறிமுகம் இல்லாத ஜோதிடர்களையும் வளரும் ஜோதிடர்களையும் இணைத்து நிகழ்ச்சிகள் நடத்தி வருகிறோம். அதில் **திரு.**விசு அய்யர் அவர்களின் பங்களிப்பு குழுவில் உள்ள ஒவ்வொருவர்களையும் ஊக்குவிக்கும் ஊட்டசத்தாகவே நாங்கள் உணர்கிறோம்.

ஸ்ரீராம் ஜோதிட மாத மின்னிதழ், ஜோதிட வகுப்பு, தனி நபர் ஜோதிட ஆலோசனை, நிறுவன ஜோதிட ஆலோசனை என பல நிலையில் ஜோதிட சேவை ஆற்றிவரும் ஸ்ரீராம் குழுமம் ஜோதிடம் தொடர்பான நல்ல நூல்களை வெளியிட்டு தன் சேவையினை விரிவாக்கு**வதில் பெரு மகிழ்ச்சி கொள்கிறது.**

பித்ரு பூசைகளை மிகுந்த பொருட் செலவில் செய்ய வேண்டியதாலும், முறைப்படி செய்வித்து தர வேத விற்பன்னர்கள் கிடைப்பதும் இன்றைய சூழலில் அரிதாகி விட்டது. இதன் தொடர்சியாக முன்னோர்களை வழிபடும் நீத்தார் கடனை செய்ய முடியாமல், பெயரளவிற்கு ஏதோ செய்யும் நிலையினை காணும் போது மனம் வருந்தும் படி ஆகிறது. **அதன் வெளிப்பாடே இந்த நூல் உங்களின் கைகளில் தவழ்கிறது.**

இந்த நூலின் வழியே பித்ரு வழிபாடுகளின் அவசியத்தினை அறிந்து கொள்ள செய்ததோடு அதற்க்கும் அப்பால் தமிழ் வழியில் பித்ருக்களின் வழிபாட்டு முறையினை கூறியுள்ளது சிறப்பு**க்குரியது**.

**இந்த நூலில்** கூறப்பட்டுள்ள பல்வேறு கருத்துக்கள் **பலவும் மனதிற்கு ஏற்புடையனவாகவே உள்ளது**. இவைகள் அனைத்து ஜோதிடர்களுக்கும் **ஏற்புடையனவாகவே இருக்கும்** என்று சொல்வதில் மாற்று கருத்து இல்லை.

**அதன் வெளிப்பாடாகவே சோதிடத்தில் பத்தாண்டிற்கும் மேல் அனுபவம் பெற்ற எண்ணியல் இளவல் பொன்தாமரைக்கண்ணன் இந்த நூலின் பின் பகுதியில் சோதிட குறிப்புகளை இணைத்து செய்து இந்த நூலிற்கு பெருமை சேர்த்துள்ளார்.**

சாதாரண மக்களும் எளிதில் படித்து புரிந்து பயனடையும் வகையில் **வடிவமைப்பில் உதவிய எங்கள் அன்பிற்குரிய உதவியாளர்கள் குறித்த நேரத்தில் வெளி வர ஒத்துழைப்பு நல்கியமைக்கு நன்றிகள் சொல்வதில் பதிப்பாளர் என்ற முறையில் பெருமை கொள்கிறோம்.**

இதில் கூறப்பட்ட வழிபாடுகள் நமது நண்பர்களால் பின்பற்றப்பட்டு மிகுந்த பலன் தந்துள்ளதனையும் கூற கடமை பட்டுள்ளேன். ஆன்மீக அன்பர்கள் அனைவரும் **தமிழ்வழி வழிபாடு செய்து இதனால்** பயன் பெற திருமுருகன் திருவருள் செய்ய வேண்டி நிற்கிறோம்.

**அனிதா ஸ்ரீ**
**பதிப்பாசிரியர்**
**ஸ்ரீராம் பதிப்பகம்.**
**அலைபேசி எண்.76677 45633**

# நூலாசிரியர் உரை

"கொடு" என்பதை விட இன்றைய நாளில் "எடு" என்பது அதிகம் வளர்ந்து விட்டது. கொடுக்க மனம் இல்லாதவர்களை கொடுமைக்காரன் என்று தானே சொல்லனும்.

இறந்தவர்களுக்கு திதி அல்லது தர்ப்பணம் தர வேண்டும் என்று சொன்னால் பலரும் அதை செய்யாமல் விடுவதற்கு காரணம் தேடுகின்றனர். மக்கள் மத்தியில் மாற்றம் வந்து விட்டது.

ஜீன்ஸ் போட்டால் பொண்னு, சுடிதார் போட்டால் ஆன்டி, சேலை கட்டினால் பாட்டி என சேர்த்து சொல்லும்படி கால சூழல் மாறி விட்டது.

பிராமண குடும்பங்களில் கூட மடிசார் கட்டிக் கொள்ளும் கலாச்சாரம் மறைந்து வருகிறது. இன்றைய இளைய தலைமுறை பெண்களுக்கு மடிசார் கட்டிக் கொள்வது கூட தெரியவில்லை. விளம்பர உலகில் ரெடிமேட் ஒட்டிக்கோ கட்டிக்கோ என ரெடிமேட் புடவைகளும் வந்துவிட்டது.

காலத்திற்கேற்ப வாழ பழக வேண்டும் என்பதில் மாற்று கருத்து இல்லை என்றாலும், இன்றைய இளைய சமுதாயத்திற்கு மனதில் படும் படி சொல்லித்தரும் பெரியவர்களும் அதிகம் இல்லை. அதனால் அவர்கள் மனம் விரும்பும்படி தமிழ்வழியே எளிய முறையில் பிதுர்கடன் எனும் அமாவாசை வழிபடுதல் பற்றி சொல்ல பிறந்தது தான் இந்த புத்தகம்.

இந்த புத்தகத்தில், பிதுரர் என்பவர் யார் என்பது முதல் வழிபாட்டு முறைகள் நீங்கள் கேட்க விரும்பும் சந்தேகங்கள், இது போன்ற தமிழ் முறை வழிபாட்டில் பயன் பெற்றவர்களின் கருத்து என அனைத்தும் ஒரு சேர உள்ள புத்தகம் இது. இந்த புத்தகத்தில் மரணத்தின் போது செய்ய வேண்டிய கிரியா விதிகள் பற்றி சொல்லவில்லை. அதற்கு பின் உள்ள வழிபாடு தான் சொல்லப்பட்டிருக்கிறது.

இன்றைய நாளில் படிக்கும் பழக்கம் குறைந்து வருவதற்கு காரணம் மின் அணு வளர்ச்சி தான். புத்தகங்களை அடுக்கி

வைப்பதற்கும் இடம் குறைந்து உள்ள சூழலில் சுற்றுப்புற சூழலிற்கு ஏற்ப இந்த புத்தகம் மின் புத்தகம் எனும் இ-புத்தகமாக வெளிவருகிறது.

படிப்பதற்கு நேர வாய்ப்பு இல்லாத நம் இளைய தலைமுறைகளுக்காக இது ஆடியோ புத்தகமாகவும் வருவதற்கு முயற்சிகள் செய்து வருவதாக பதிப்பாசிரியர் என்னுடன் ஆலோசனைகளை பகிர்ந்து வந்தார். அதுவும் விரைவில் வெளிவரும் என உங்களைப் போல நானும் ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

இந்த புத்தகத்தின் இணை ஆசிரியராக கைகோர்த்த பொன் தாமரைக் கண்ணன், எண்ணியல் மற்றும் ஜோதிடத் துறையில் ஆழ்ந்த புலமை பெற்றவர். கணிதமில்லா சோதிட பாடம் நடத்தும் சோதிட ஆசிரியர். இவர் இந்த புத்தகத்தில் பிதுர் தோஷத்திற்கான ஜாதக அமைப்புகளையும் சோதிட குறிப்புகளையும் தந்துள்ளார். இது சோதிட அறிவு இல்லாதவர்களாலும் எளிமையாக புரிந்து கொள்ளும்படி அமைந்துள்ளது மேலும் சிறப்பு சேர்க்கும்.

இந்த புத்தகத்திற்கு நீங்கள் தரும் விலை அடிப்படை கட்டமைப்பு செலவுகளுக்காக மட்டுமே. அதனால் இந்த புத்தகத்திற்கு தரும் செலவினை முதலீடாக கருதி பதிப்பாசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும்.

இந்த புத்தகத்தை பதிப்பித்து தரும் அனிதாஸ்ரீ கண்ணன் என் அன்பிற்குரியவர். அவர் நீண்ட நாட்களாகவே இப்படி ஒரு புத்தகம் பதிப்பித்து தர வேண்டும் என வேண்டினார். திருமுருகன் திருவருள் இப்போது தான் கூடி வந்துள்ளது.

இந்த புத்தகத்தை படித்து தமிழ்வழியே பிதுர்கடன் வழிபாடு செய்து வாழ்வில் முன்னேற்றம் காண திருமுருக பெருமான், முன் நின்று உதவ வேண்டும் என்று பிரார்த்தனைகளை வைக்கிறோம்

பேரன்புடன்,

விசு அய்யர்

# பொருள் மதி

## பிறப்பும் ....
## இறப்பும்.....

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ மாநிலத்தில்

என ஔவையார் எழுதி வைத்தார். இறப்பு நடக்காத வீட்டில் இருந்து ஒரு பிடி அரிசி வாங்கி வரும்படி புத்தர் சொன்னதாக சொல்லுவார்கள்.

ஆம் பிறப்பு என்று ஒன்று இருந்தால் நிச்சயம் இறப்பு உண்டு. ஆனால் இறப்பிற்கு பின் நடப்பது என்ன ? என்பது நமக்கு தெரியாது ? பிறப்பிற்கு முன் நடந்தது என்ன என்பதும் நமக்கு தெரியாது ? சோதிட அடிப்படையில் இவைகளை குறித்து சொன்னாலும் எப்படி ஏற்றுக் கொள்வது என்பதில் இன்றைய தலைமுறைகள் கவனமாகவே இருக்கிறார்கள்.

கரு உருவாகி அது திருவாக வேண்டும் என்பது தான் பிறப்பின் நிகழ்வு. ஆனால் இப்படி நடக்கிறதா என்றால் இல்லை என்பது தான் நிலை. இது தவறும் அல்ல, சரியும் அல்ல. இருப்பதை அப்படியே ஏற்றுக் கொள்வது தான் பக்குவம் வாய்ந்த மனதின் நிலை.

உலகில் உள்ள அனைவரும் ஏதோ ஒரு துன்பத்தை அனுபவிக்கமால் இருப்பது இல்லை. அப்படி துன்பத்தை அனுபவிக்கும் ஒவ்வொருவரும் துன்பத்தில் இருந்து

விடுபட வேண்டும் என விரும்புகிறார்களே அன்றி அதற்கான காரணத்தை தெரிந்து கொள்ள விரும்புவதில்லை.

நாம் செய்யும் வினை வழியே தான் அதற்கான பயன்களும் வரும். அது சரி தான் என்றாலும் சிலருக்கு நல்ல வினை இருந்தும் நல்ல பலன்கள் கிடைப்பதில்லை. இதனை பூர்வ ஜென்ம புண்ணியம் என்று சொல்லி சமாதானம் செய்து கொள்வார்கள்.

கடிகாரம் பார்த்து நேரத்தை அறிந்து கொள்ளும் முன் நம் முன்னோர்கள் சூரியனைப் பார்த்து காலத்தை கணித்தார்கள். அப்படியானால் இந்த சூரியனும் தோன்றுவதற்கு முன்னால்....

நினைத்துப் பார்த்தால் இருட்டாகவே இருக்கிறது. ஆம் இருட்டாகவே இருந்திருக்கும் அந்த கொடிய இருளில் கிடந்த உயிர்களின் மீது கொண்ட இரக்கத்தினால் உயிருக்கு உடலை கொடுத்தவன் இறைவன். அதனால் தான் இறைவன் படைத்தான் என்று சொல்கிறார்கள். இறைவன் உயிர்களை படைக்கவில்லை, போகங்களை அனுபவிக்க உடலைத்தான் படைத்தான்.

இந்த உடலைப் பெற்ற உயிர்கள், விருப்பு வெறுப்புகளை வெளிப்படுத்த அவை வினைவயப்படுகிறது. அது நல்வினையோ தீவினையோ அதன்படி பிறப்பு சுழற்சியில் இந்த உயிர்கள் தொடர் பயணம் கொள்கிறது.

பிறப்பதும், இறப்பதும் மாறி மாறி நிகழ்வதால் மாற்றம் உயிருக்கு இல்லை. உடலுக்கு தான். இந்த அடிப்படையை தெரிந்து கொண்டால் நாம் செய்யக் கூடிய ஒவ்வொரு கர்மங்களும் உயிரில் பதியும்.

இதை அறியாமல் நம்மில் பலர் பிறப்புக்கு செய்யும் சிறப்புகளை இறப்புக்கு செய்வதில்லை. இதன் தொடர்ச்சியில் நன்றி அறியாத செயலில் துன்பம் துயரம் தொல்லை என உயிர்கள் படும் பாடு சொல்லி மாளாது. அந்த நன்றி மறக்கும் செயலை உயிர்கள் செய்வதால் வரும் பிறப்புகளில் கூட அது தொடர்கிறது.

அப்படி நன்றி தெரிவிக்கும் செயல்கள் பல உண்டு. இப்படி நன்றி தெரிவிக்கும் வாய்ப்பு எல்லா உயிர்களிடத்திலும் உண்டு.

ஆனால் மற்ற உயிர்கள் உணவு பெறும் வரை தான் நன்றி காட்டும். இப்படி நன்றி காட்டும் போது தான் அந்த உயிர்கள் அடுத்த மேல் நிலையை அடைகின்றன.

அப்படி நன்றி காட்டும் செயல்களில், ஒன்று தான் பிதிரர் வழிபாடு. இருப்பவர்களுக்கு தானே நன்றிகள் சொல்ல வேண்டும். இருப்பவர்கள் இறந்து விட்டால் அவர்களுக்கும் நன்றிகள் சொல்ல வேண்டுமா ? அப்படி நன்றிகள் சொன்னால் அது அவர்களை போய் சேருமா ? இப்படி நிறைய சந்தேகங்கள் வரும் அந்த சந்தேகம் இந்த புத்தகத்தின் நிறைவு பக்கம் வரை படித்துப் பாருங்கள் சந்தேக விளக்கம் கிடைக்கும்.

அப்படியானால் இந்த பிதிரர் வழிபாடு என்றால் என்ன ? பிதிரர் என்பவர்கள் யார் ? அவர்களை நாம் பார்க்க முடியுமா ? இது தானே உங்கள் கேள்வி. தொடர்ந்து படியுங்கள்

தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்று ஆங்கு
ஐம்புலத்தார் ஓம்பல் தலை

என்பது வள்ளுவம். இல்வாழ்வான் கடமைகளை சொல்லும் போது வள்ளுவம் தென்புலத்தார் கடமையை முதலில் வைத்து சொல்வதே இதன் சிறப்பை சொல்லும்.

தென்புலத்தார் என்பவர் பிதிரர் என்று உரை விளக்கம் சொல்லுவார்கள். பிதிரர் என்பவர்கள் யார் ? இவர்களை பற்றி தெரிந்து கொள்ளாமல் எப்படி இவர்களுக்கு நன்றி செலுத்த முடியும் என கேட்க விரும்பும் இளையதலைமுறைகளுக்கு விளக்கம் சொல்லித் தானே ஆகனும்.

பிதிரர் என்பவர் அயனால் படைக்கப்பட்ட கடவுள் ஜாதி என்று தான் உரை குறிப்பு தரப்பட்டு இருக்கும். திருக்குறளில் ஒரு பிரமாணம் சொல்லப்பட்டு இருந்தால் அதனை அப்படியே ஏற்றுக் கொள்வது தான் தமிழர்களின் கடமை. தமிழர்களின் வேதம் திருக்குறள் அல்லவா.

இவர்களுக்கு இருப்பிடம் தென் புலம் அதாவது தென் திசை, அதனால் தென்புலத்தார் என்று வள்ளுவம் குறிப்பிடுகிறது.

# பிதிரர் என்பவர் யார் ?

பொதுவாக பிதிரர் என்றதும் நாம் இறந்த முன்னோர்களை குறித்து சொல்லப்பட்டதாக நினைத்து கொள்வது இயல்பே. ஆனால் பிதிரர் என்பவர்கள் வழிபாட்டிற்குரிய கடவுள் பிரிவை சேர்ந்தவர்கள்.

இவர்கள் தான் நாம் வெளிக்காட்டும் நன்றி உணர்வுகளை நம் முன்னோர்களுக்கு சென்று சேர்ப்பவர்கள். இறந்தவர்கள் அனைவரையும் பிதுரர் என்று சொல்வது சரியன்று.

அதனால் தான் யார் இறந்தார்கள் அவர்களுக்கு யார் கர்மா செய்ய வேண்டும் ? எத்தனை நாட்கள் தீட்டு ? போன்ற ஒழுக்க் நடைமுறைகளை விளக்கி சொல்லி இருக்கிறார்கள். அதனால் இறந்தவர்கள் அனைவரும் பிதுரர்கள் இல்லை. உபச்சாரத்திற்காக இப்படி சொல்வது நடைமுறை வழக்கமே அன்றி வேறில்லை.

இல்லற வாழ்வில் இருப்பவர்கள் அதாவது குடும்ப வாழ்வில் இருப்பவர்கள் தான் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் இந்த திருக்குறளை இல்வாழ்க்கை என்ற அதிகார தலைப்பின் கீழ் வைக்கப்பட்டுள்ளது என்பது நம்மை வியக்க வைக்கும் உண்மை பொருள்.

முட்டையை விட்டு குஞ்சு பறவை வெளியே பறந்து செல்வது போல, உடலை விட்டு இந்த உயிர் பிறிந்து விடும். பிறிந்து செல்லும் உயிர் தத்தம் கர்ம வினைகளுக்கு ஏற்ப வேறு ஒரு உடலை பெறும். நாம் செலுத்தும் நன்றி கடனை இந்த பிதுரர்கள் வாங்கி அந்த உயிர் எந்த உடல் எடுத்து இருக்கிறதோ அந்த உயிருக்கு சேர்ப்பார்கள்.

இதனை நம் மொழியில் புரிந்து கொள்ள வேண்டும் என்றால் எளிமையான உதாரணம் கொண்டு சொல்லலாம். வெளி நாட்டில் இருந்து நமக்கு ஒருவர் பணம் அனுப்புகிறார் என்று வைத்துக் கொள்வோம். அவர் அனுப்பும் டாலர் அல்லத குறிப்பிட்ட நாட்டின் பணம் அப்படியே நமக்கு வந்து சேருகிறதா ?

அந்த டாலர் பணம் மாற்றும் தரகர் (exchange broker) கை வழியே நமக்கு நாம் பயன்படுத்தும் இந்தியன் ரூபாயாக வரும். இந்த மீடியேட்டர் பணியை செய்பவர் தான் பிதுரர்கள். இவர்கள் துணையின்றி நாம் டாலராக உள்ள பணத்தை நமது நாட்டு ரூபாயாக மாற்ற முடியாதோ அது போல் பிதுரர்கள் துணையின்றி, இறந்து போன நம் முன்னோர்களை நாம் அணுக முடியாது.

இந்த பிதுரர்களை வழிபட்டு நாம் காட்டும் நன்றி உணர்வுகளை தத்தமது உயிர்களுக்கு கொண்டு சேர்க்க வேண்டுவதே இந்த பிதுரர் வழிபாட்டின் நோக்கம்.

அப்படியானால் இந்த பிதுரர் வழிபாடு அத்தனை சிறப்பு பெற்றதா ? தொடர்ந்து படியுங்கள்....



# மரணமும் தோஷமும்

பிறருக்கு கிடைத்தது நமக்கு கிடைக்கவில்லையே என்று வருந்தி பொறாமைபடாத விஷயம் மரணம் மட்டும் தான்.

நாமே வாழ்க்கை முறையில் பார்த்து இருப்போம் ஒருவரின் மரண செய்தி வந்தவுடன் எத்தனை கருத்து வேறுபாடு அல்லது பகை இருந்தாலும் அதையெல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு மரணமடைந்து வீட்டுக் சென்று துக்க விசாரனைக்கு செல்வார்கள்.

மரண சடங்கில் ஒரு துரும்பும் பிசகாது செய்வது மிகவும் அவசியம். இறந்தவர் எத்தனை பெரிய பதவி வகித்தவரானாலும் அவர் பெயரை நீக்கி அதற்கு பிணம் என்று பெயர் வைப்பார். நீரில் குளித்து முடித்தவுடன் அவரை மறந்தும் விடுவார் என்று பட்டினத்தார்

*பெயரினை நீக்கி பிணம்*
*என்று பெயர் இட்டு*
*சூரையங் காட்டிடை*
*கொண்டு போய் சுட்டிட்டு*
*நீரினில் மூழ்கி*
*நினைப்பு ஒழிவாரே*

என்று பாடுகிறார். இறந்த அந்த உடலுக்கு முறையாக செய்ய வேண்டிய காரியங்களை செய்ய வேண்டும்.

வைதீக தர்மத்தில் உள்ளவர்கள் அபரி கிரியை என்றும்

தீட்சை பெற்றவர்களாக இருந்தால் அந்தியேஷ்டியும் செய்வார்கள். இதில் சொத்து தகராறு போன்ற எந்த பிரச்சனை இருந்தாலும் அதையெல்லாம் கொஞ்சம் ஒதுக்கி வைத்து விட்டு கொஞ்சம் கூட பிசகு ஏற்படாமல் செய்ய வேண்டும். பிரேத சாபம் ஏற்படாமல் பாத்துக் கொள்ள வேண்டும். இந்த தோஷம் ஏழு தலைமுறை களுக்கு தொடரும்.

அந்திம கிரியை செய்ய வருபவர் வெளி நாட்டில் அல்லது வெளி ஊரில் இருந்து வரும் வரை (குளிர் சாதன) பெட்டியில் வைத்து அல்லது வேறு பல காரணங்களில் தகனம் செய்யாமல் நீண்ட நாட்கள் வைத்திருந்தாலும் குடும்ப பகை காரணமாக துக்கம் விசாரிக்காமலும் கலந்து கொள்ள வாய்ப்பிருந்தும் கலந்து கொள்ளாமல் இருந்தாலும் மரண தீட்டு போக குளிக்காமல் மற்ற நிகழ்ச்சியில் கலந்து கொண்டாலும் பிரேத தோஷம் வரும்.

பங்காளி சண்டை பிணத்தை வைத்துக் கொண்டு சொத்து தகராறு பிரேதத்தை அலங்காரம் செய்யாமல் தகனம் செய்தல், இறந்தவரை குறித்து போய் சேர்ந்தான்யா என்பது போல பேச்சு போன்றவையும் எரிப்பவர்களை புதைப்பதும். புதைப்பவர்களை எரிப்பதும் பிரேத தோஷத்தை தரும்.

இந்த பிரேத தோஷம் பித்ரு தோஷத்திற்கு வித்து. இப்படி ஒன்று நடந்து விட்டால் வயதான பெரியவர்கள் கவனிக்கப்பட மாட்டார்கள், கசப்பான திருமண வாழ்வு முறைகேடான உறவுகள், திறமை இருந்தும் வாய்ப்புகள் கை நழுவி செல்லுதல் இப்படி பலவும் நடக்கும்.

இதே போல தனிஷ்டையில் நிகழும் மரணம் அதற்கேற்ப ஆசௌச கிரியைகள் செய்யாமல் இருப்பது இப்படி பலவும் இந்த கொடுமையான தோஷத்தை தரும்.

அது பித்ரு தோஷ அல்லது சாபம் குறித்து அறிந்து கொள்ள முடியும். இதை நாம் எப்படி தெரிந்து கொள்ள முடியும் என்ற குறிப்பை இந்த நூலின் பின் பகுதியில் தரப்பட்டுள்ள சோதிட குறிப்பு பகுதியில் பார்த்து தெரிந்து கொள்ளலாம்.

## ஏன் பித்ரு வழிபாடு செய்யனும்

முன்பெல்லாம் சிராா்த்தம் செய்யனும் என்றால் முதல் நாளே தயாராகி விட வேண்டும். சிராா்த்தம் செய்வதற்கு என்றே தனியாக பொருட்களை வாங்கவேண்டும். அதை மீதம் வைக்காமல் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஒரு குடும்பத்திற்கு சிராா்த்தம் செய்து வைத்த வைதீகா் மற்றும் வைதீக பிராமணா் ஒரே நாளில் இன்னொரு குடும்பத்திற்கு செய்து வைக்க கூடாது.

ஒரு நாள் சிராா்த்தம் செய்தால் அன்றைய நாளில் வேறு எங்கும் வெளியில் அல்லது ஓட்டலில் சாப்பிடக் கூடாது. முதல் நாளே சிராா்த்தம் செய்யும் வீட்டில் இருந்து நல்லெண்ணை மற்றும் அரப்பு தூள் வாங்கி மறு நாள் எண்ணை ஸ்நானம் செய்து அதன் பிறகு தான் அந்த வீட்டில் சிராா்த்தம் செய்ய போகனும்.

இப்படி ஒரு பெரிய பட்டியலே இருக்குது. ஆத்தாடி இம்புட்டா என்று பயப்பட வேண்டாம். இன்றைய நாளில் இதனை இப்படி செய்பவா்களும் இல்லை. இப்படி செய்து வைப்பவா்களும் இல்லை.

அவசரமாக எதையோ சொால்லி எதையோ செய்து விட்டு தன் கடமை முடிந்து விட்டது என்பது போல கடமைக்கு செய்வதும் கூலிக்கு

வேலை செய்வது போல அவர்களும் இருப்பதால் பலருக்கும் இந்த வழிபாட்டின் முக்கியத்துவம் தெரியாமல் போய்விடுகிறது.

பிரச்சனை என்று வரும் போது பிராயச்சித்தம் தேடுகின்றனர் அதையும் இதே போல இன்னொரு முறையில் செய்து பலன் கிடைக்காமல் வருந்து கின்றனர். இப்படி செய்யாமல் இருப்பதற்கு இவர்களாக சில காரணங்களையும் நொண்டி சமாதானங் களையும் சொல்லிக் கொள்வார்கள்

அவர்கள் தான் இறந்து விட்டார்களே அவர்களுக்கு கொடுப்பதால் அது அவர்களுக்கா போய் சேர போகிறது என்று சிலர் வறட்டு வாதம் பேசுவார்கள்.

இன்னும் சிலர் இப்போ ஐயர்கள் கிடைப்பதில்லை, இருப்பவர்களும் சரியாக செய்வதில்லை. எல்லாம் பணமா போச்சு சார். என்று தான் செய்ய தவறிய கடமைகளுக்கு நியாயம் சொல்லிக் கொண்டு இருப்பார்கள்.

ஏதோ தமிழ் மீது பற்று உள்ளவர்கள் போல சிலர் என்னமோ வட மொழியில் சொல்றாங்க, நம்மையும் சொல்ல சொல்றாங்க, அவங்களுக்கு புரியுதோ இல்லையோ நமக்கு ஒன்னும் புரியவில்லை. ஏதும் புரியாமல் சொல்லியோ செய்தோ என்ன பயன் என்று தான் நான் செய்வதில்லை என்பார்கள்.

நாலு பேருக்கு சாப்பாடு வாங்கி கொடுத்தால் போச்சு சார் இதுக்கு போய் ஏன் இத்தனை மெனக்கிடனும். நமக்கு லீவும் கிடைப்பதில்லை என்று சிலர்.

நைட் ஷிப்ட்டு பார்க்கிற எங்களால இதெல்லாம் செய்ய முடியுமா சொல்லுங்க என்ன பண்ணணுமோ அதை செய்துக்கோங்க இந்தாங்க பணம் என பணத்தை கொட்டும் ஐடி துறையில் வேலை செய்யும் இளையவர்களும் உண்டு.

இப்படி பலரும் சில காரணங்களை காட்டி சிராா்த்தம் மற்றும் அமாவாசை தர்ப்பணம் தராதவர்கள் சொல்லொனா துன்பத்திற்குள் சிக்கி வருந்துவார்கள்.

சிலருக்கு பணம், தங்கம் வெள்ளி வீடு என வசதிகள் இருக்கும். ஆனால் வாரிசுக்கு ஒன்றும் இருக்காது. சிலருக்கு நிம்மதி இருக்காது. ஏதோ பயம் இருந்து கொண்டே இருக்கும்.

இன்னும் சிலருக்கு எத்தனை வாய்ப்புகள் வந்தாலும் அதை முழுமையாக செயல்படுத்திக் கொள்ள மாட்டார்கள். ஒரு ஜான் ஏறினால் ஒரு அடி அல்ல இரண்டு அடி கூட சருக்கும். ஒரு முறை முறையாக தர்பணம் சிரார்த்தம் திதி கொடுத்தல் இவைகளை செய்தால் ஆச்சரிய படும்படி தடைகள் விலகி இன்பம் தழைக்கும்.

பிறப்பு என்பது சம்பவம் தான். அதை பிறந்த நாள் என்று ஒவ்வொரு நாளும் இன்னும் சிலர் இறந்த பின்னும் பிறந்த நாளை கொண்டாடி மகிழ்கிறோமே, இருக்கும் போது நம்மோடு இருந்து நம்மை வளர்த்த பெற்றோர்களுக்கு ஒரு நன்றி கடன் செய்ய முடியாதா ?

அந்த நன்றிக்கடன் தான் இந்த பிதிரர் வழிபாடு.

சரி ... இறந்தவர்களுக்கு செய்யும் இந்த நன்றிக் கடனை இந்த வழிபாட்டை எப்போ செய்யனும் என்பது தான் உங்களுடைய அடுத்த கேள்வியாக இருக்கும்.

தொடர்ந்து படியுடங்கள் விளக்கம் கிடைக்கும்.



# பித்ரு தோஷமா சாபமா ?

மரணம் என்பது ஒருவருக்கு, கீழ்காணும் ஏழு நிலைகளில் நிகழ்ந்து இருக்கலாம்.

- இயற்கையாக மரணம் சம்பவிக்கும்
- கொலையால் இறந்திருக்கலாம்
- தற்கொலை செய்து இருக்கலாம்
- விபத்தில் மரணம் நேர்திருக்கலாம்
- கூட்டு மரணம் (மாஸ்டெத்)
- அரசு தண்டனையால் மரணம்
- மருத்துவ சிகிச்சையில் மரணம்

ஒவ்வொரு இறப்பு முறைக்கும் ஒவ்வோரு விதமான காரண காரியங்கள் இயல்புகள் உண்டு. இவைகளை 1) மரணம் 2) துர்மரணம் என்ற இரண்டில் அடக்கி விடுவார்கள்.

ஒரு குடும்பத்தில் துர் மரணம் சம்பவித்தால் அங்கே மூன்று தோஷம் தொடரும். அவை 1) குல தெய்வ தோஷம் 2) பித்ரு தோஷம் 3) சர்ப்ப தோஷம் சிலருக்கு பிரேத தோஷமும் இருக்கும்.

அதனை சோதிடம் வழி அறிந்து கொள்ளலாம். இறந்த இந்த ஆத்மா எந்த கதியை அடைகிறது என்பதை புண்ணிய சக்கரம் போட்டு தெரிந்து கொள்ளலாம். பிதுர் பூசை செய்த பின் ஆத்மா சாந்தி அடைந்ததா என்பதை பிரச்சனம் போட்டு தெரிந்து கொள்ளலாம்.

இப்படி பல வழி முறைகள் நம்மிடம் இருக்கிறது. ஆனால் இதையறியாமல் எல்லாவற்றையும் வெளி நாட்டுக் காரர்கள் சொன்ன பின் தான் நம்புவோம் என்று சொல்லிக் கொண்டிருந்தால் அது அறியாமையே. இது போன்ற விஷயங்களில் அவர்கள் நம்மிடம் ஆர்வமாக கேட்டு தெறித்து கொள்ள வரும் போது நம்மவர்களை நினைத்து நாம் வெட்கப்பட வேண்டி உள்ளது. கற்றுக் கொடுப்பது தமிழினம் அல்லவா ?

அப்படியானால் இது போன்ற பிதுரர் வழிபாடு செய்யவில்லை என்றால் பிதுரர் சாபம் வருமா ? என்பது உங்கள் கேள்வியாக இருக்கும்.

பிதுரர் சாபம் வேறு. பிதுரர் தோஷம் வேறு. இதனை புரிந்து கொள்ள இன்றைய நடைமுறைக்கு ஏற்ப நாம் புரிந்து கொள்வதற்காக எளிமையாக சொல்கிறேன்.

பிதுரர்கள் என்பவர்கள் முன்பு சொன்னது போல் தேவுக்கள் அது ஒரு கடவுள் சாதி. அவர்கள் நம் தாத்தா, பாட்டி போன்ற முன்னோர்கள் அல்லர். உபச்சாரமாக நாம் அப்படி சொல்வது உண்டு அவ்வளவுதான்.

இறந்து போன நம் முன்னோர்கள் வேறு இடத்தில் வேறு உடல் எடுத்து பிறந்து இருப்பார்கள். மறுபடியும் மனித பிறவி தான் வாய்த்திருக்கும் என்றும் சொல்ல முடியாது. ஆனால் அந்த உயிருக்கு அழிவு கிடையாது. அவர்களுக்கு சொல்லும் இந்த நன்றி உணர்வு தான் இந்த வழிபாடு. இந்த வழிபாட்டை இந்த பிதுரர்கள் வாங்கி உரியவர்களுக்கு அளிப்பார்கள். அதனால் அவர்கள் மகிழ்ச்சியும் திருப்தியும் அடைந்து வாழ்த்துவார்கள்.

உதாரணமாக உங்கள் நன்றி உணர்வை வெளிக்காட்ட அமாவாசை தர்ப்பணம் அல்லது வருடாந்திர திதி அல்லது சிரார்த்தம் செய்யவில்லை என்று வைத்துக் கொள்வோம். அப்போ என்ன நடக்கும் என்பதை கற்பனையாக எண்ணிப்பாருங்கள். வரிசையில் சாப்பாடு வாங்குவதற்கு நின்று இருக்கும் போது, உங்கள் முறை வரும் போது உங்களுக்கு சாப்பாடு இல்லை என்றால்

உங்கள் மன நிலை எப்படி இருக்கும்.

அப்படித்தான் உரியவர்களுக்கு போய் சேர பிதுரர்களுக்கு நீங்கள் எதுவும் தரவில்லை என்றாலும், அந்த சமயத்தில் அவர்கள் வெளிப்படுத்தும் அந்த எண்ணம் நம்மை பாதிக்கும். இது சாபம் என்று சொல்வோம். இதை பித்ரு சாபம் என்று வழக்கில் சொல்வது உண்டு.

சர்வதேச வங்கியில் போட்ட பணத்தினை எந்த நாட்டில் எடுத்தாலும் அந்த நாட்டின் கரன்சியாக கிடைக்கிறது அல்லவா, அதே போல நாம் இங்கு செய்யும் இந்த பித்ரு வழிபாடு நமது முன்னோர்கள் எந்த உலகத்தில் இருந்தாலும் அவர்களை சென்று சேர்ந்துவிடும்.

சரி இப்போ இந்த வழிபாடு செய்வது தான் எப்படி ?



## வழிபாடு செய்வது எப்படி ?

இந்த வழிபாடு தமிழ் முறை செய்வது சுலபம். ஐயர் சரியாக மந்திரம் சொல்கிறாரா என்று தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. நமது பட்ஜெட்டுக்கு மேலே தட்ஷினை கொடு என கேட்பாரோ என்ற பயம் இல்லை. பான் பராக் போட்டுக்கிட்டு அந்த ஐயர் செய்வது நமக்கு திருப்தியாக இல்லை என்றும் தோன்றாது.

இலையும், நீரும், நூலும் இருந்தால் போதும். இத்துடன் கொஞ்சம் நேரம் செலவழிக்க வேண்டும். அவ்வளவு தான். இப்படி தமிழ் வழி பூசைகள் செய்யலாம். இதனால் வரும் பலன் அடுத்த சில நாட்களிலேயே கூட உங்களால் உணர முடியும்.

சரி இந்த வழிபாடு எப்படி செய்ய வேண்டும் என்று குறித்துக் கொள்ளுங்கள்.

பிதுரர் வழிபாடு செய்யும் நாள் அல்லது அமாவாசை நாளில் அதிகாலையில் எழுந்திருக்க வேண்டும். அதிகாலை என்பது காலை சூரிய உதயத்திற்கு முன்பாக என்று மனதில் வையுங்கள். வழிபாடு செய்பவர்கள் மட்டும் அல்ல. வீட்டில் உள்ள அனைவரும் எழுந்திருக்க வேண்டும்.

காலைக் கடனை முடித்து வீட்டை மெழுகி சுத்தம் செய்த பின்னர் அன்று முழுதும் எரியும் படியான அணையா தீபம் ஒன்றும் மோட்ச தீபம் ஒன்றும் ஏற்ற வேண்டும். வசதி இல்லாதவர்கள் உச்சிப் பொழுது வரை சுடர் விடும் தீபமாக இருந்தாலும் சரி.

இந்த தீபம் ஒரு பெரிய மண் அகல்விளக்கில் இருக்க வேண்டும். இது மோட்ச தீபத்திற்கு. இன்னொரு சிறிய மண் அகல் விளக்கு வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த அகல் விளக்கை முதல் நாளிலேயே நீரில் ஊற வைத்து தேய்து கழுவி சுத்தமாக வைத்திருக்க வேண்டும். சுடர் வடக்கு பார்த்து இருக்கும் படியும், சிறிய அகல்விளக்கு கிழக்கு அல்லது மேற்கு பார்த்தும் இருக்கலாம்.

வாழை இலை (நுனிஉள்ளது) பரப்பி, அதில் ஒரு வெண்கல சொம்பு அல்லது பித்தளை அல்லது வசதி உள்ளவர்கள் வெள்ளி சொம்பு பயன்படுத்திக் கொள்ளலாம். (எவர்சில்வர் தவிர்க்கவும்).

இந்த சொம்பில் முழுதும் நிறையும்படி சுத்தமான நீர் நிரப்பி அதை வைத்து (அதில் எள்ளு மற்றும் துளசி சேர்க்க தேவையில்லை. RO மற்றும் மினரல் வாட்டர் வேண்டாம்.)

அதன் முன்னர் மாம் பலகையில் அமர்ந்துபடி, பலகை இல்லாதவர்கள் **pooja mat** பயன்படுத்திக் கொள்ளலாம். தமிழ் முறை பாடல்களை கீழ்கண்ட வரிசையில் பாடலாம். (உங்கள் வசதிக்காக பாடல் குறிப்புகளை நூலின் இறுதி பக்கத்தில் வரிசைகிரமமாக கொடுக்கப்பட்டுள்ளது)

பாடல்களை பாடுவதற்கு முன், இந்த வாய்ப்பினை அருளிய இறைவனுக்கு நன்றி கூறவும்,

பின் கர்ம வினை பற்றிய குறிப்புகளை அந்த உயிர் உணர்வதற்காகவும் நாம் உணர்ந்து மனம் திருந்தவும் திருக்குறளில் வரும் ஊழ் என்ற அதிகாரத்தில் உள்ள 10 குறட்பாக்களை படனம் செய்ய வேண்டும்.

அதை தொடர்ந்து திருஞானசம்பந்தர் அருளிய திருவிளமர் திருப்பதிகத்தை படனம் செய்ய வேண்டும்.

அதை தொடர்ந்து அப்பர் சுவாமிகள் அருளிய நின்ற திருத்தாண்டகம் படனம் செய்ய வேண்டும்.

அது முடிந்த பின்னர் பாம்பன் சுவாமிகள் அருளிய குந்துகால் படனம் செய்ய வேண்டும்

நிறைவாக திருக்குறளில் உள்ள மெய்யுணர்தல் என்ற அதிகாரத்தில் உள்ள பத்து குறட்பாக்களையும் படனம் செய்ய வேண்டும்.

இதன் பிறகு உங்களுக்கு விருப்பம் அல்லது வசதி இருந்தால் விரும்பியவைகளை படைக்கலாம். அப்படி எதுவும் இல்லை என்றால் எதுவும் செய்ய வேண்டாம். வெண்கல சொம்பில் வைத்த நீர் மட்டுமே போதும்.

இவை முழுதும் செய்து முடிக்க 90 நிமிடங்கள் ஆகும். அவ்வளவு தான்.

அதன் பிறகு சொம்பில் வைத்த நீரை மறுநாள் கால் படாத இடத்தில் கொட்டி விடலாம். கழிநீர் குழாயில் கொட்ட கூடாது. நீர் நிலைகள் கடல் அல்லது கிணறு போன்ற இடங்களில் கொட்டி விடலாம்.

மறுநாள் எழுந்து பார்த்தால் பாத்திரத்தில் உள்ள தண்ணீர் அளவு குறைந்து இருக்கும் என்பதை அவரவர் அனுபவத்தில் உணரலாம். ஒரு சிலருக்கு இப்படி தண்ணீர் அளவு குறையாமல் இருக்கலாம். அதற்காக வருந்த வேண்டாம். அது அவரவர் வினைப்பயனே.

விபத்தில் இறந்தவர்களுக்காக இந்த பூசை செய்வதானால், சுத்தமான பசுஞ்சான திருநீற்றில் அவர்களை எண்ணி சிந்தையில் வரவழைத்து அதில் பஞ்ச கவ்யம் சேர்த்து 7 முனையில் பிடித்து வைத்து புண்ணிய சக்கரத்தின் வழி அந்த உயிர் நிலை அறிந்து அதற்கு ஏற்ப படையல் வைத்து வழிபாடு செய்யலாம்.

## பூஜை நாளின் ஒழுக்க நியதிகள்

வழிபாடு செய்யும் இந்நாளில் செய்யக் கூடாதவை என்று சில உள்ளது அவைகளையும் சொல்வது தானே பயனாக இருக்கும்.

அன்றைய நாளில் அசைவ உணகளை தவிர்க்க வேண்டும் (கீரையை தவிர) பச்சை நிற காய்கறிகளை எடுத்துக் கொள்ளலாம். மஞ்சள் மற்றும் சிவப்பு நிற காய்களை தவிர்ப்பது நல்லது. குறைந்தளவில் உப்பு இருக்கலாம்.

உப்பினை தவிர்ப்பது நல்லது. சர்க்கரை சேர்க்க கூடாது. தவிர்க்க முடியாதவர்கள் நாட்டு சர்க்கரை குறைவாக சேர்த்துக் கொள்ளலாம்.

மறு நாள் வரை டிவி பார்க்க கூடாது எந்த கேளிக்கையும் கூடாது. உடல் உறவு கூடாது. வீட்டில் உள்ளவர்களுடன் சண்டை போட கூடாது. அவர்கள் செய்வது தவறாகவே இருந்தாலும் பொறுமையுடன் இருக்க வேண்டும். குறிப்பாக இறந்தவர்களை திட்டக் கூடாது, அவர்களை குறை சொல்லக் கூடாது. நாம் சாப்பிட்ட தட்டாகவே இருந்தாலும் எச்சில் தட்டில் சாப்பிடக் கூடாது. (இலையில் சாப்பிடலாம்)

தொழில் முறையாக வெளி உலகில் மற்ற மக்கள் தொடர்பில் இருப்பவர்கள், ஒரு துளியும் யாருடனும் துவேஷம் காட்டக் கூடாது.

# எப்போது வழிபாடு செய்ய வேண்டும்

எப்போ செய்ய வேண்டும் என்பது நல்ல சிந்தனை தான்.

செய்ய வேண்டும் என்ற உங்கள் சிந்தனையே பாதி வெற்றியை தந்து விட்டது என்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது.

புது வருடம் பிறந்த உடன் இந்த வருடம் எத்தனை நாட்கள் லீவு வருகிறது என்ற பழக்கம் நம்மில் பலருக்கு உண்டு.

குறிப்பிட்ட எண்ணிக்கையில் உள்ள அந்த நாட்கள் தான் அரசாங்க அல்லது பண்டிகை விடுமுறைகள் வருகிறது என்றாலும் அந்த நாட்களை தேடி பிடித்து பார்ப்பதில் தான் எத்தனை ஆர்வம்.

அப்படித்தான் இந்த பித்ரு வழிபாடு செய்யக் கூடிய நாட்களும் வருடத்திற்கு என குறிப்பிட்டு சொல்ல முடியும்.

மொத்த எண்ணிக்கையில் வருடத்திற்கு 96 நாட்கள் செய்ய வேண்டும்.

அப்பாடி இத்தனை நாட்களா என்று புருவத்தை உயர்த்த வேண்டாம். நாம் ஒரு வருடத்திற்கு சாப்பிடும் உணவுகளை ஒப்பிட்டு பார்த்தால் இது ஒன்றும் பெரிதல்ல.

ஒரு சின்ன பட்டியல் இருக்கிறது பொறுமையாக படியுங்கள்

| | |
|---|---|
| மன்வாதி நாட்கள் | 14 |
| யுகாதிநாட்கள் | 14 |
| தமிழ் மாதப்பிறப்பு | 12 |
| அமாவாசை | 12 |
| மாளயபட்ஷம் | 15 |
| வ்யாதீபாதம் | 12 |
| வைத்திருதி | 12 |
| அஷ்டகா | 04 |
| அன்வஷ்டகா | 04 |
| பூர்வேத்யு | 04 |

இந்த 96 நாட்களிலும் செய்ய வேண்டும். இது முடியவில்லையா ... பரவாயில்லை வருடத்திற்கு

12 அமாவாசை

12 மாத பிறப்பு

15 மாளாய பட்ஷம்

ஆக இந்த 39 நாட்கள் செய்ய வேண்டும்

இதுவும் முடியாது என்றால் 12 அமாவாசையிலும் 15 மாளயபட்ஷத்திலும் அவசியம் செய்தே ஆக வேண்டும் என்பதில் உறுதியாக இருங்கள்.

வெளி நாட்டில் அல்லது நைட் ஷிப்டில் வேலை செய்பவர்கள் நாங்கள் எங்களால் இவ்வளவு நேரம் செலவு செய்ய முடியாது என்று சொல்பவர்கள் வருடத்திற்கு 12 அமாவாசையில் மட்டுமாவது செய்யுங்கள்.

இதுவும் முடியாது என்றால் மன்னிப்பே கிடையாது ஒரு ஆண்டில் வரும் ஆடி அமாவசை, புரட்டாசி அமாவாசை, தை

அமாவாசை ஆகிய நாட்களில் கட்டாயம் செய்தே ஆக வேண்டும் என்பதில் உறுதியாக இருங்கள். மற்றவைகளுக்கு நேரம் செலவு செய்கிறோமே இதற்கு செய்ய முடியாதா ? நிச்சயம் முடியும்.

நாம் செய்து பழக்கத்தில் வைத்தால் தான், நம்மை தொடரும் அடுத்த தலைமுறைகள் இதனை பின் தொடரும். அவர்களுக்கு நாம் விட்டுச் செல்லும் அரிய சொத்து இந்த நல்ல பழக்கங்கள் தானே. அதனால் அவர்களை கருத்தில் கொண்டு கொடுக்கப்பட்டுள்ள நாட்களில் எவ்வளவு நாட்கள் முடியுமோ அத்தனை நாட்கள் தவறாது செய்யுங்கள்.

இது தொடர்பாக உங்களுக்கு இன்னும் சந்தேகம் அல்லது கேள்விகள் கேட்க தோன்றும். வருத்தம் வேண்டாம். நீங்கள் கேட்க விரும்பும் கேள்விகளை எல்லாம் தொகுத்து தடைகளும் விடைகளும் என்ற பகுதியில் உள்ளது. உங்கள் சந்தேகம் விளங்கும்.

நீங்கள் சொல்லும் இந்த நாட்கள் எதுவென தெரியவில்லையே எப்படி தெரிந்து கொள்வது என்று வருந்த வேண்டாம்.

அடிப்படை சோதிட குறிப்புகள் பஞ்சாங்கம் பார்ப்பது எப்படி போன்ற தகவல்களை ஸ்ரீராம் பயிற்சி மற்றும் ஆராய்சி மையம் ஆன்லைன் வழி வகுப்பு நடத்துகிறது. இதில் சேர்ந்து பயன் பெறலாம்.

ஒரு முறை பயிற்சி எடுத்தால் போதும் ஆயுள் காலம் முழுதும் பலன். வருங்கால சந்ததியினருக்கும் சொல்லித் தரலாம். வாய்ப்புகளை பயன்படுத்திக் கொண்டு பயன் அடையுங்கள்.



## இயற்கைக்கு மாறான மரணம்

துர்மரணம் என்று சொல்லும் இயற்கைக்கு மாறான மரணங்களும் இன்றைய நாளில் தவிர்க்க முடியவில்லை.

அவை கொலையாக இருக்கலாம், தற்கொலையாக இருக்கலாம், வாகன விபத்தாக இருக்கலாம், அல்லது பணி நிமித்தம் கீழே விழுந்து சந்திக்கும் இறப்பாகவும் இருக்கலாம்.

இப்படி எந்த நிலையில் இயற்கைக்கு மாறாக மரணம் சம்பவித்தாலும் அந்த குடும்ப செழிப்பில் ஒரு குறை இருந்து கொண்டு இருக்கும்.

இவர்கள் முக்கியமாக புண்ணியச் சக்கரம் போட்டு அந்த ஆத்மாவின் கதியை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

இவர்கள் அதற்கான சிறப்பு பரிகாரங்கள் செய்வதும் அவசியம்.

எல்லா சமயங்களிலும் இவை சாத்தியப்படாத சூழலில், இறந்த இந்த ஆத்மாவிற்காக மோட்ச பிண்டம் தர வேண்டும். மோட்ச தீபம் ஏற்ற வேண்டும்.

இதை சொன்னால் சும்மா சொல்வது போல தோன்றும். ஆனால் இதை செய்து பார்த்து பலன் பெறும் போது தான் இந்த சின்ன விஷயத்தில்

இவ்வளவு இருக்குதா என்று நமக்கே வியப்பாக இருக்கும்.

இப்படி துர்மரணம் அடைந்தவர்களுக்காக ஒவ்வொரு தீபாவளி அன்று எம தீபமும் திருகார்த்திகைக்கு முன்பு பரணி தீபமும் ஏற்றி வைக்க வேண்டும். இது அகண்ட தீபமாக ஒரு நாள் முழுதும் அணையாமல் எரியும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

இது சுத்தமான மண்ணால் செய்யப்பட்ட பெரிய அகல்விளக்கில் (மடக்கு) சுத்தமான நல்லெண்ணய் ஊற்றி நூல் திரி கொண்டு வடக்கு முகம் பார்த்த படி ஏற்றி வைக்க வேண்டும்.

இந்த நூலின் பின் பகுதியில் தரப்பட்ட தமிழ் முறை பாடல்களை முறையாக பாடி (காய்ச்சாத) நாட்டு மாட்டு பசும்பாலை (ஜெர்சி பசு அல்ல) அரசமரத்தடியில் ஊற்றிவிட வேண்டும்.

இத்தனையும் செய்ய வசதி இல்லை என்பவர்கள், நாட்டு பசு மாட்டிற்கு காய்கறிகளை சுத்தமாக கழுவி பின் அதனை கொடுக்க வேண்டும். குறிப்பாக உருளை கிழங்கு தரலாம்.

இப்படி அகால மரணம் அடைந்தவர்கள் மூத்தவர்கள் ஆனால் ஆட்டிற்கு இனிப்பு வகைகளை கொடுக்கலாம்.

இன்னமும் பலர் இது சோதிட அமைப்பு இதனை எந்த பரிகாரத்தினாலும் மாற்ற முடியாது. இது தான் விதிக்கப்பட்டது என்று சொல்லி நாம் ஏதாவது செய்யலாம் என நினைத்தாலும் நம் எண்ணத்தினை கலைத்து விடுவது போல பேசுவார்கள்.

பாவங்களுக்கும் சாபங்களுக்கும் தீர்வு இல்லை. அனுபவித்துத்தான் ஆக வேண்டும் என்றால், இறைவன் கருணை அற்றவன் என்பது போல ஆகிவிடும்.

அதனால் மாற்றுக் கருத்து உள்ள மற்றவர்களின் எண்ணங்கங்களுக்கு செவி கொடுக்காமல், உரிய பரிகாரங்களை உங்கள் நம்பிக்கைக்குரிய சோதிடரை சந்தித்து செய்து பலன் பெறுங்கள்.

## தடைகளும் விடைகளும்

**ஒரே நபருக்கு ஒரே நேரத்தில் இரண்டு இடங்களில் தர்பணம் செய்யலாமா ?**

தரலாம். தடையேதும் இல்லை.

**நமக்கு புரியாத வடமொழியில் தான் தர்பணம் தர வேண்டுமா ?**

அப்படி இல்லை. நமக்கு தெரிந்த மொழியில் தரலாம் இது அவரவர் மன நிலையை பொறுத்த்தது

**மாறி வரும் இன்றைய கால சூழலில் பொழுதில் எப்படி செய்ய வேண்டும் ?**

இது போன்ற கேள்வி களுக்காக தான் இந்த நூல். அதை இந்த நூல் விரிவாக சொல்லும்

**அண்ணன் தம்பி இரண்டு பேரில் அண்ணன் தர்ப்பணம் தராமல் போனால் தம்பி தர்ப்பணம் தரலாமா ?**

நிச்சயம் தந்தாக வேணும்.

**நமது பூஜை முறைகளால் பித்ருக்கள் திருப்தி அடைந்தனர் என நம்மால் அறிய முடியுமா. ?**

முடியும். பிரசன்ன ஜோதிடம் அல்லது ஆரூடம் மூலம் உறுதி செய்து கொள்ளுதல் நலம்.

## பித்ருக்கள் திருப்தி அடையாத போது சில அறிகுறிகள் தோன்றுமா ?

இதனை பற்றி ஒரு சின்ன குறிப்பு தருவதானால், திருப்தி அடையாத நிலை இருந்தால் உடலில் மச்சம் அல்லது கறுப்பு குறி தோன்றும் இதனை அடுத்த சில நாட்களில் காணலாம் ( 3 நாள் என்று குறிப்பு சொல்லும் )

## ஆண் வாரிசு இல்லதவர்கள் ஆத்மா சாந்தி அடையுமா ? தனக்குதானே தர்ப்பணம் செய்து கொள்ளலாமா ?

ஆம், இதை தான் ஆத்ம பிண்டம் என்று சொல்லுவார்கள் கயா சிரார்த்ததில் இதுவும் ஒரு முக்கியஅம்சமாக வரும். அங்கு செல்ல வாய்ப்பில்லாதவர்கள், திருஞானசம்பந்தர் அருளிய ‘எழுகூற்று இருக்கை‘யை தினசரி வழிபாட்டில் சேர்த்துக் கொண்டால் போதும்.

## விபத்தில் இறந்தவர்களுக்கு சிறப்பான பரிகாரம் உள்ளதா ?

சதையை பூமியில் கிடைத்த அல்லது போட கூடாது. இது காலதேவனின் சாபம். பொதுவாக விபத்தில் இறந்தவர்கள் நிலை இப்படி தான் இருக்கும். அதனால் தான் விபத்தில் இறந்தவர்களுக்கு நீர் கடன் செலுத்தும் போது தனியாக சில மந்திரங்கள் சொல்லுவார்கள் (அதை நடைமுறையில் இன்றைய பல ஐயர்கள் சொல்லுவதில்லை) தமிழ் பாரம்பரிய முறையில் திருஞானசம்பந்தர் அருளிய ‘எழுகூற்று இருக்கை‘யை தினசரி வழிபாட்டில் சேர்த்துக் கொண்டால் போதும்.

**முன்னோர்கள் தீயவர்களாக இருந்தல் பிதுர் கடன் செய்ய வேண்டுமா? உதாரணமாக முன்னோர் ஒரு கொலை செய்து வித்டார் அவரது மகன் அவருக்கு செய்ய வேண்டுமா?**

எவ்வளவு தீயவரகினும், நம்மை வெறுத்து ஒதுக்கிய முன்னோராராக இருப்பினும் கூட னீம் தர்பணம் நிச்சயமாக செய்தாக வேண்டும் என்பதே பதில். நீர்கடன் அனைவருக்குமானது. இதில் யாரும் விலக்கு பெற முடியாது.

**எங்கள் குடும்பத்தில் திதி கொடுப்பதில்லை. இதற்க்கு பதிலாக பல வழிகளில் தர்மம் செய்து வருகிறேன்? போதுமல்லவா?**

தர்மம் சரி. ஆனால் அது அதற்க்கு சரியானது அல்ல. செய்யும் தர்மத்திற்கு நிச்சய பலன் உண்டு. ஆனால், இது நன்றி கூறுவதாகும். செய்யும் தருமம் நன்றிக்கு நிகர் ஆகாது என்பது உறுதியான விசயமாகும்.

**ஓர் குடும்பத்தில் அப்பா இருக்கார் . ஆனால் அந்த அப்பா தனது அப்பாவுக்கு திதி கொடுப்பதில்லை. இதற்க்கு பதிலாக அந்த தாத்தாவிற்க்கு பேரன் மாகாளய பத்சத்தில் திதி தரலாமா?**

அப்பா தான் தர வேண்டும் அல்லது அப்பா தர சொல்லுவார்கள். அது நடைமுறையில் முடியாது என்ற சூழல் உண்டானால் குடும்ப சண்டையில் தான் முடியும். இந்த சூழலில் தமிழ் முறை வழிபாடு நிச்சயமாக தர வேண்டும். இதனை பேரன் அல்லது வீட்டிலுள்ள யாவரும் செய்யலாம். இதனால் வரும் நல்ல பலனை உடனே அறியலாம். (3 நாள் என்பது கணக்கு. இதில் கீழ்கண்ட குறிப்பு தெரியும்.)

**ஒரு அமாவாசை அல்லது நீங்கள் குறிப்பிட்டு சொன்ன நாளில் செய்ய முடியவில்லை. இன்னொரு நாள் செய்யலாமா ?**

செய்ய வேண்டும் என்ற உங்கள் எண்ணமே பாராட்டுக்குரியது. தமிழ் முறையில் செய்யலாம் தவறில்லை. ஆனால் அந்த நாளில் செய்வது தான் சிறப்பு.

**நீங்கள் சொல்லும் படி தமிழ்முறை வழிபாடு செய்த பின் அய்யருக்கு தட்சணை கொடுக்க வேண்டுமா ?**

உங்கள் வசதி போல கொடுக்கலாம். அவசியமோ கட்டாயமோ இல்லை. ஆனால் ஒழுக்க விதிகளை அவசியம் கடைப்பிடிக்க வேண்டும்.

**உடலுக்கு தானே பெயர் அந்த உடலை எரித்தோ அல்லது புதைத்தோ விட்டபின் அந்த பெயர் சொல்லி திதி தருவது அறிவுக்கு ஏற்புடையதாக தெரியவில்லையே.**

இந்த பெயரில் உடலை தாங்கிய அந்த உயிருக்கு என்று தான் இந்த வழிபாடு செய்கிறோம். இது பணம் அனுப்பும் போது IFSC No, உடன் account No, வும் குறிப்பிடுவது போல...

**எத்தனை வருஷம் திதி தர வேண்டும் என்ற கணக்கு உள்ளதா ?**

நாம் எவ்வளவு நாள் சாப்பிட வேண்டும் என்ற கணக்கு உள்ளதா ? அப்படித்தான் நாம் இருக்கும் வரை செய்தாக வேண்டும்

**இப்போது நம் பெற்றோர்களாக உள்ளவர்கள் முந்தைய பிறவியில் ஏதோ ஒரு பிறப்பில் இருந்து இருப்பார்களே. அப்படியானால் அந்த பிறவியில் அவர்களுக்கு செய்த சிரார்த்த பலன் இந்த பிறவியில் இவருக்கு கிடைக்குமா ?**

நீங்கள் நலமாக வசதியாக வாழ்வது எதனால் என்று நினைக்கிறீர்கள். எங்கோ நமது ஆன்மாவுக்காக செய்யப்படும் பித்ரு பூஜையே ஆகும். சிலர் அப்படி இல்லாமல் கஷ்டத்தில் இருப்பதற்கும் காரணம் அது தான். இது நிச்சயம் அனுஷ்டிக்க வேண்டிய கடன் ஆகும்.

**புரோகிதரை நம்பி போவதா ? அவரால் சொர்க்கத்திற்கு பூஜையினை போக வைக்க முடியும் என சொல்வது போல உள்ளதே இது சரியான முறை தானா ?**

நீங்கள் ஊருக்கோ அல்லது வெளி நாட்டிற்கோ போகும் போது வழி உங்களுக்கு தெரியுமா ? விமான ஓட்டியை நம்பித்தானே விமான பயணம் செய்கிறீர்கள். இது சரியான முறைதானா என எப்போதாவது சிந்தித்தது உண்டா ?பித்ரு பூஜை மிக முக்கியமானதாகும். தமிழ்முறை வழிபாட்டினை இந்த புத்தகத்தில் உள்ளபடி செய்து பாருங்கள். உங்கள் ஐயம் விலகும்.

**இப்போதெல்லாம் எந்த பூஜையின் பின்னரும் முழு மனட்திருப்தி உண்டாவதில்லையே, அதற்கு என்ன காரணமென கூற முடியுமா ?**

பல காரணங்களை கூற முடியும். இன்றைய நாளில் ஐயர் சரியில்லை, பூஜை முறை சரியில்லை அல்லது முறையாக பக்தியுடன் வழிபட்டாலும் கூட திருப்தி இல்லை. மாறாக ஏதோ சோகம் அல்லது வெறுமை தொற்றிக் கொண்டு வருவது போல தோன்றுகிறது இல்லையா ? இதற்கு காரணமாக இருப்பதை எனது பார்வையில் சொல்லவா ? உணவு தான் காரணம். உணவு தான் உணர்வுகளை தூண்டும். அதனால் உணவில் கவனம் வைப்பது சிறப்பு.

## சோதிட குறிப்புகள்

இறைவனின் திருவிளையாடல் களை புரிந்து கொள்ள முடியாமல் தவிக்கும் பொது எந்த விசயமும் கடினமாகவே தெரியும்.

குறிப்பித்ட காலகத்டம் தாண்டிய பிறகு பட்ட கஷ்டங்கள் அனைத்தும், வெற்றிக்கான அடித்தலமே என்பதை உணருவோம். மனிதர்களின் மனம் அப்படித்தான் வடிவமைக்கப் பத்டுள்ளது.

இந்த நிலையில் இறைவன் நமக்கித்ட பணி என்ன, நாம் எதற்காக பிறந்துள்ளோம், இறைவனை அடைய நாம் செய்ய வேண்டியது என்ன, இதுபோன்ற விசயங்களை அறிந்து கொள்ள இறைவனால் தரப்பத்டுள்ள கலையே ஜோதிடம்.

ஜோதிடத்தினை வாழ்வியல் வழிகாத்டியாக்கிய பெருமை, நமது ஆன்மீகப் பெருமக்களையே சாரும். சித்தர்களால் கண்டறியபட்ட ஆயிரமாயிரம் கலைகளில், மானிடர்கள் அறவழியில் சென்று ஆன்ம முன்னேற்றம் அடைய உதவுவது ஜோதிடக் கலையாகும்.

குறிப்பாக இருட்டில் உள்ள ஒருவருக்கு வழிகாட்டும் ஞான வெளிச்சம் ஜோதிடம் ஆகும்.

ஜோதிடத்தில் பல்வேறு நிலைகளில் கூறப்பத்ட காலவித்தியாசம் பற்றிய முன்னோர்களின் கணிதம் நமது கற்பனைக்கும் எத்டாது.

உதாரணமாக, உறுதியாக வருடத்தில் மூன்று அமாவசைகளில் வழிபாடு செய்தல் வேண்டும் என கூறியதை கண்டோம். இது ஏன் எனும் கேள்விக்கு ஜோதிட வழியில் துல்லிய பதில் காணலாம்.

நமக்கு வருடம் என்பது 365 நாளாக இருப்பினும், தேவர்களுக்கு வெறும் ஒரு நாள் மட்டுமே. காலம் என்பது வெவ்வேறு உலகங்களுக்கு வெவ்வேறாக உள்ளதனை அறியும்போது வியப்பின் உச்சிக்கே செல்கிறோம்.

இன்றைய நவீன அறிவியல் விஞ்ஞானிகள் இந்த விபரங்களின் உண்மைத் தன்மையினை ஒவ்வொன்றாக நிரூபித்து வருகிறார்கள். இந்த காலக்கணிதத்தினை சுருக்கமாக அறிவோம். இவைகள் சூரிய சித்தாந்தத்தின் படியான கணக்கீடுகள்.

| | |
|---|---|
| 60 நாளிகை | = 1 நாள் |
| 30 நாட்கள் | = 1 மாதம் |
| 12மாதம் | = 1 வருடம் |
| 60வருடம் | = 1 ஆண்டு வட்டம் |
| 7,200 ஆண்டு வட்டம் | = கலியுகம் |
| 72,00,000 வட்டம் | = 1 சதுர்யுகம் |
| 71 சதுர்யுகங்கள் | = 1 மனுவந்திரம் |
| 14 மன்வந்திரங்கள் | = 1 கல்பம் |
| 2 கல்பம் | = பிரம்மனுக்கு 1 நாள் |

நமது பிரம்மாவுக்கு இப்பொது 51 வருடம் ஆகிறது. இந்த கணக்கீடுகள் அனைத்தும் கண்மூடித்தனமாக கூறப்பட்டவைகள் அல்ல. வேண்டுமானால், இதனுடைய உண்மைத்தன்மைகள் அறிவியல் ரீதியாக இன்னமும் நிரூபணம் ஆகவில்லை எனலாம். நிச்சயமாக ஒருநாள் நிரூபணம் ஆகும்.

சூரிய ஒளி என்பது ஏழு வண்ணங்களின் ஒருங்கிணைப்பு தான் என நிரூபித்து இயற்பியலுக்கான நோபல் பரிசினை பெற்றார் சர். சி.வி.இராமன். பல்லாயிரம் ஆண்டுகளாக சூரியனை ஏழு குதிரைகளில் வருகிறார் எனத்தானே வணங்குகிறோம்.

சூரியனுக்கு ஏழு குதிரைகள் எனும் விசயத்தினை ஆராய்ச்சி செய்து, அதனை நவீன விஞ்ஞானத்தில் ராமன் அவர்கள் நிரூபித்ததை போல அறிவியலாளர்கள் நமது கலாச்சாரத்தினில் உள்ள விசயங்களை ஆராயும்போது, அனைத்து உண்மைகளும் வெளிப்படும்.

சூரிய ஒளியில் அதிகமாக சிதறடிக்கப்பத்டு வானிலும் கடலிலும் நீலம் தான் ஆட்சி செய்கிறது. இந்த விசயத்தினை தான் ராமன் கிருஷ்ணன் அவதாரங்களில் அவர்களின் வண்ணமாக கூறியுள்ளார்கள் எனவும் புரிந்து கொள்ள முடியும். இறைவனின் கருணையினை வியந்து பித்ரு தோசத்திற்கான ஜாதக விசயங்களை பார்போம்.



# ஜாதகத்தில் பித்ரு தோஷம்

பிரபஞ்சத்தின் இருப்பில் நமது இடமானது மிகச்சிறியதாகும். இத்தனை சிறிய வாழ்க்கையில்,எத்தனை ஆசாபாசங்கள் கோபதாபங்கள். இருப்பினும் கூட மனிதனின் இயல்பின்படி இது சரியானது தான்.

எல்லாம் சரியாக இருந்தும் தேவையில்லாத தடைகள். வீட்டில் ஏதாவது விசேசம் பண்டிகை எனில் அந்த சமயத்தில் சண்டை சச்சரவு உண்டாகுதல். குழந்தைகளின் ஒழுக்க குறைவான நடத்தைகள். திருமண மாகும் முன்பே வீத்டில் இருந்து வெளியேறுதல். குடும்பத்தில் படிப் படியாக செல்வாக்கு குறைதல். பற்களின் வரிசை சரியில்லாத, மனநலம் பதித்த குழந்தைகள் பிறத்தல்.

நான் யாருக்கும் எந்த தீங்கும் நினைக்கவில்லையே, எனக்கு ஏன் இத்தனை கஷ்டங்கள் தடைகள் என தடுமாறும் நிலையில், தக்க ஜோதிடரை அணுகி குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் ஜாதகத்தினையும் பொறுமையாக ஆராயும் பொது, நீங்கள் அதில் இருந்து விடுபடும் வழி நிச்சயம் கிடைக்கும்.

தடைகளை உண்டாக்கும் ஜோதிட அமைப்புகள் பல்வேறு இருப்பினும், நாம் பித்ரு தோஷம் சம்பந்தமான சில அடிப்படை அமைப்புகளை காண்போம்.

சூரியன், சந்திரன் இவர்களை முக்கியமாக கொண்டு உண்டாகக் கூடிய, பித்ரு தோசத்தினை ஐந்து முக்கியமாக நிலைகளில் காண வேண்டும்.

1 . குல தெய்வ சாபம் (அ) தோஷம்

2 . சர்ப்ப சாபம் (அ) தோஷம்

3 . பித்ரு சாபம் (அ) தோஷம்

4 . பிரேத சாபம் (அ) தோஷம்

5 . சத்ரு தோஷம்

## குலதெய்வ சாபம்.

பரம்பரையின் முன்னோர்கள், தன் குடும்பத்துக்கு உண்டாகும் கடுமையான சோதனைகள், பிரச்சனைகள் இவற்றில் இருந்து காப்பாற்றி இருப்பார்கள். அந்த புண்ணிய ஆத்மாக்கள், தனது வழித்தோன்றலில் வந்துள்ள வாரிசுகளுக்கு தனது உதவிகளை செய்ய எப்போதும் தயாராக இருக்கும். இவர்களையே குலதெய்வமாக வழிபடுவர். இந்த தெய்வங்களை வழிபடாமல் விடுவதாலும் உதாசீனப்படுத்தி பேசுவதாலும், குல தெய்வ சாபம் ஏற்படுகிறது.

இதனை 5, 11 ம் இடத்தினை வைத்து கண்டறியலாம். 5, 11 ம் அதிபர்கள் லக்கினத்துக்கு பாதகமான இடங்களில் இருப்பது குல தெய்வ சாபம் இருப்பதனை உறுதி செய்யும். மேற்கண்ட இடத்தில சர்பங்களின் இருப்பு மற்றும் சனியின் தொடர்பும் இதனை கோடிட்டு காட்டும்.

இதில் சூரியன் சந்திரன் நீசம் பெற்று அல்லது வேறு வகையில் கெட்டு விட்டது என்பது சாபம் என்பது கடுமையாகி தோஷமாக மாறுவதை காட்டுகிறது. இவர்களில் பலருக்கு குல தெய்வம் எது என்பது கூட தெரியாமல் போய்விடுகிறது.

## சர்ப்ப தோஷம்

ராகு கேது என இரண்டு பாம்பு கிரகங்கள் இருப்பினும் தோஷ விசயத்தில் தனியாக பார்க்க வேண்டியதில்லை. அதன் காரணத்தினால் பொதுவில் சர்ப்ப தோஷம் என வைத்துள்ளது. பித்ரு தோசத்தினில் சர்ப்பங்களின் பங்கு மிக அதிகம். சூரிய சந்திரர்களை சுற்றி சுழன்றி வரும் ராகு கேதுக்கள் பித்ரு தோசத்தினை உருவாக்குவதில் சிறப்பான இடம் பெறுகிறார்கள்.

லக்கினத்தின் முதல் திரிகோணத்தில் (1, 5, 9 ஆகிய இடங்கள்) சர்ப்ப கிரகங்கள் இருப்பது சர்ப்ப தோஷமாகும். இது போன்ற அமைப்பினால் பல்வேறு இன்னல்கள் உண்டாகிறது. இந்த ஜாதகர்களுக்கு பெரும்பாலும் பரிகாரங்கள் சீக்கிரம் பலிதமாகது. ஆகவே மிகுந்த சிரத்தியுடன் இருப்பது அவசியம்.

லக்கினத்தின் இரண்டில் சர்பம் இருப்பது சாபத்தினை குறிக்கிறது. சனி தொடர்பால் பாரம்பரியமாகவே சர்ப்ப தோஷம் உள்ளதை உறுதி படுத்தலாம். ஜோதிடரின் வழிகாட்டுதலால் முறையான பூஜைகள் திருத்தல வழிபாடுகள் மற்றும் வாழ்வியல் பரிகார முறைகளை கை கொள்ளும் பொது சிறப்பான முன்னேற்றம் பெற முடியும்.

## பித்ரு தோஷம்

சூரியன் சந்திரன் ஆகியோரில் ஒருவர் அல்லது இருவரும், ஆறு எட்டு பனிரெண்டு ஆகிய இடங்களில் இருந்தாலும், சூரியனின் சிம்ம வீடு அல்லது சந்திரனின் கடகம், லக்கினத்துக்கு ஆறு எட்டு பனிரெண்டு ஆகிய இடத்தில் அமைந்தாலும் பித்ரு சாபத்தினை கூற வேண்டும்.

இந்த அமைப்பினில் சூரியன் சந்திரனோடு பாம்புகளின் சேர்க்கை தொடர்பு பித்ரு சாபத்தின் வலிமையினை அதிகரிப்பதாக கொள்ளவும். (தொடர்பு என்பது பார்வை சேர்க்கை சாரம் பெறுதல்

ஆகியவைகள் ஆகும்) லக்கினம் மற்றும் சூரியன் சந்திரன் ஆகிய மூன்றுக்கும் குருவின் தொடர்பு இல்லாமல் போகும்போது இன்னமும் கடுமையான பித்ரு தோஷமாக கூற வேண்டும்.

இவர்கள் பல்வேறுவிதங்களில் கடினமாக புண்ணிய கர்மாக்களை செய்துவந்தால், பிற்காலத்தில் இவர்களின் பரம்பரையில் வருபவர்கள் பித்ரு சாபமின்றி பிறந்து நற்கதியடைவார்கள். இந்த நூலில் கூறப்பட்ட பூஜைமுறை அனைவர்க்கும் பயனாகும். ஆனாலும் சிறப்பாக பித்ரு தோஷமுள்ள வர்களுக்கு பயன்படும்.

## பிரேத சாபம்

பிரேத சாபம் பல்வேறு விதங்களில் உண்டாகிறது. இறந்தவரின் சடலத்தினை வைத்துக்கொண்டு பல்வேறு சண்டைகள் சச்சரவுகள் செய்வதும். உடலை அவமதிப்பதும். இறந்தவர்களை தூசிப்பதும், ஈமகிரியை செய்ய விடாமல் தடுப்பதும் பிரேத சாபத்தினை உண்டாகும்.

ஜாதகத்தில் பிரேத சாபம் பற்றி தெரிந்து கொள்வோம். சூரியன் சந்திரன் இவர்களுக்கு கேந்திரம் திரிகோணம் இவற்றில் மாந்தி பிரேத சாபத்தினை கூறும். இந்த அமைப்புடன் பாதகாதிபதியும் சம்பந்தப்படும்போது சாபம் என்பது தோசமாகி பெரும் சங்கடங்களை தந்து விடுகிறது.

## சத்ரு தோஷம்

ஒளி கிரகங்களான சூரிய சந்திரர்கள் பாம்புகளால் பாதிக்கப்பட்டு இருப்பது, பிறரால் செய்வினை ஏவல் வைக்கப்படும் அமைப்பாகும். பித்ருக்களின் ஆசிர்வாதம் இல்லாத போது, அவர்கள் மிக சுலபமாக சத்ரு தோஷம் எனும் செய்வினைக்கு ஆத்படுகிறார்கள்.

பித்ரு தோஷம் கொண்ட ஜாதகமாக இருந்து அவர்களுக்கு அதில் புதனும் நீசம் வக்கிரம் அஸ்தங்கம் பெற்று நான்கு எட்டு பனிரெண்டின் தொடர்பில் இருப்பது கடினமான தோஷம் ஆகும்.

இதிலிருந்து விடுபட எளிதான பல சூட்சும வழிபாடுகள் இருக்கிறது. அதனை ஸ்ரீராம் பதிப்பகத்தின் வெளியீடான 'பலன் தரும் பரிகாரங்கள்' எனும் நூலில் விரிவாக தரப்பட்டுள்ளது.

ஜோதிடத்தில் பல்வேறு விதமான சூட்சுமங்கள் இருந்தாலும் நமது அன்பர்கள் அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும்படி உள்ள நிலைகளை பற்றி மட்டுமே இதில் கொடுக்கப்பத்துள்ளது.

வாசக அன்பர்கள் தங்கள் ஜோதிடரை முறையாக அணுகினால் அவர்கள் பல்வேறு நல்வழிகளை காட்டுவார்கள். ஜோதிடரின் மனம் மகிழும்படி மரியாதை செலுத்துவதும், நிறைவான தட்சணையினை தாம்பூலத்தில் வைத்து தருவதும் சிறப்பு. இது போல மரியாதை செய்பவர்களுக்கு ஜாதக குருவின் கருணை பார்வை உண்டாகி நலமோடு வாழ்கிறார்கள்.

இந்த நூலில் கூறப்பட்ட அனைத்து பூஜா மற்றும் ஜோதிட விசயங்களும் எளிதானது. இதனை பல்லாண்டுகளாக அனுபவதில் கூறப்பட்டுள்ளது. அன்பர்கள் இதனால் பயன் அடைந்து விடுவதொன்றே இந்நூலின் பயனாக இருக்கட்டும். இறையருளால் அநேக நல்லவிசயங்கள் கூறப்பட்டுள்ளது. நல்லதே நடக்கும்.



இந்த நூலை
பணம்
செலுத்தாமல்
நீங்கள்
பெற்றுள்ளவரா ?

Paytm
Accepted Here

sriraam jothida kendra

ஆம் என்றால்
அந்த பாவச்
செயலை நாம்
செய்ய வேண்டாமே

To Pay, Scan QR Code in Paytm App



India's Most Sincere Bank
Paytm Payments Bank

நூலுக்கு உரிய
தொகையை
விருப்பம் போல்
அனுப்பலாம்

Bank Account No.
286801000000995
favouring ANITHA
IFSC: IOBA0002868
அலைபேசி எண்.7667745633

# பதிக குறிப்புகள்

முன்னதாக நமக்கு இந்த வாய்ப்பினை அருளிய இறைவனுக்கு நன்றி கூறிய பின்னர், கர்ம வினை பற்றிய குறிப்புகளை பற்றி அறிய, அதை அந்த உயிர் உணரவும், நாம் உணர்ந்து மனம் திருந்தவும், திருக்குறளின்

## ”<u>ஊழ்</u>”

ஆகு ஊழால் தோன்றும் அசைவு இன்மை கைப்பொருள்
போகு ஊழால் தோன்று மடி.

பேதைப் படுக்கும் இழவு ஊழ் அறிவு அகற்றும்
ஆகல் ஊழ் உற்றக் கடை.

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றும் தன்
உண்மை அறிவே மிகும்.

இரு வேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு.

நல்லவை யெல்லாம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு.

பரியினும் ஆகாவாம் பால் அல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

வகுத்தான் வகுத்த வகை அல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

துறப்பார்மன் துப்புரவு இல்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின்.

நன்று ஆங்கால் நல்லவாக் காண்பவர் அன்றுஆங்கால்
அல்லல் படுவது எவன்.

ஊழின் பெருவலி யா உள மற்று ஒன்று
சூழினும் தான் முந்து உறும்.

**பிறகு ஞான சம்பந்தர் அருளிய**

## "திருவிளமர் திருப்பதிகம்"

**படனம் செய்ய வேண்டும்.**

மத்தகம் அணிபெற மலர்வது ஓர் மதிபுரை நுதல்கரம்
ஒத்தக நகமணி மிளிர்வது ஓர் அரவினர் ஒளிகிளர்
அத்தக அடிதொழ அருள்பெறு கண்ணொடும் உமையவள்
வித்தகர் உறைவது விரிபொழில் வளநகர் விளமரே.

பட்டில கியமுலை அரிவையர் உலகினில் இடுபலி
ஒட்டிலகு இணைமர வடியினர் உமையுறு வடிவினர்
சிட்டிலகு அழகிய பொடியினர் இடைமிசை சேர்வது ஓர்
விட்டிலகு அழகு ஒளி பெயர் அவர் உறைவது விளமரே.

அங்கதிர் ஒளியினர் அரை இடை மிளிர்வது ஓர் அரவொடு
செங்கதிர் என நிறம் அனையதோர் செழுமணி மார்பினர்
சங்கதிர் பறைகுழல் முழவினொடு இசைதரு சரிதையர்
வெங்கதிர் உருறுமழு உடையவர் இடம் எனில் விளமரே.

மாடமது எனவளர் மதிலவை எரிசெய்வர் விரவுசீர்ப்
பீடு என வருமறை உரைசெய்வர் பெரியபல் சரிதைகள்
பாடலர் ஆடிய சுடலையில் இடமுற நட நவில்
வேடம் அது உடையவர் வியன் நகரது சொலில் விளமரே.

பண்தலை மழலைசெய் யாழெனமொழி உமை பாகமாக்
கொண்டலை குரைகழல்அடிதொழும் அவர்வினை குறுகிலர்
விண்தலை அமரர்கள் துதிசெய அருள்புரி விறலினர்
வெண்தலை பலிகொளும் விமலர்தம் வளநகர் விளமரே.

மனைகள் தொற இடுபலி அதுகொள்வர் மதிபொதி சடையினர்
கனைகடல் இடுவிடம் அமுதுசெய் கறையணி மிடறினர்
முனைகெட வருமதிள் எரிசெய்த அவர்கழல் பரவுவார்
வினைகெட அருள்புரி தொழிலினர் செழுநகர் விளமரே.

நெறிகமழ் தரும் உரை உணர்வினர் புணர்வுறு மடவரல்
செறிகமழ் தருமுரும் உடையவர் படைபல பயில்பவர்
பொறிகமழ் தருபட அரவினர் விரவிய சடைமிசை
வெறிகமழ் தருமலர் அடைபவர் இடம் எனில் விளமரே.

தெண்கடல் புடையணி நெடுமதில் இலங்கையர் தலைவனைப்
பண்பட வரைதனில் அடர்செய்த பைங்கழல் வடிவினர்
திண்கடல் அ டைபுனல் திகழ்சடை புகுவதோர் சேர்வினார்
விண்கடல் விடமலி அடிகள்தம் வளநகர் விளமரே.

தொண்டு அசையும் உறவரு துயருறு காலனை மாள்வுற
அண்டல் செய்து இருவரை வெருவுற ஆரழல் ஆயினார்
கொண்டல்செய் தருதிரு மிடறினர் இடம் எனில் அளி இனம்
விண்டிசை யுறுமலர் நறுமது விரிபொழில் விளமரே.

ஒள்ளியர் தொழுதெழ உலகினில் உரைசெயும் மொழிபல
கொள்ளிய களவினர் குண்டிகை அவர்தவம் அறிகிலார்
பள்ளியை மெய்யெனக் கருதன்மின் பரிவொடு பேணுவீர்
வெள்ளிய பிறையணி சடையினர் வளநகர் விளமரே.

வெந்தவெண் பொடியணி அடிகளை விளமர் உள் விகிர்தரைச்
சிந்தையுள் இடைபெற உரைசெய்த தமிழ் இவை செழுவிய
அந்தணர் புகலியுள் அழகமர் அருமறை ஞானசம்
பந்தன மொழி இவை உரைசெயும் அவர்வினை பறையுமே.

**தொடர்ந்து,அப்பர் அருளிய**

## “நின்ற திருத்தாண்டகம்”

**படனம் செய்ய வேண்டும்.**

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாய் எறியும் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாய் அட்ட மூர்த்தி ஆகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிற உருருவும் தம் உருவும் தாமே ஆகி
நெருநலையாய் இன்றாகி நாளை ஆகி
நிமிர்புன் சடைஅடிகள் நின்ற வாறே.

மண்ஆகி விண்ஆகி மலையும் ஆகி
வயிரமும் ஆய் மாணிக்கம் தானே ஆகிக்
கண் ஆகிக் கண்ணுக்கு ஓர் மணியும் ஆகிக்
கலை ஆகிக் கலைஞானம் தானே ஆகிப்
பெண் ஆகிப் பெண்ணுக்கு ஓர் ஆணும் ஆகிப்
பிரளயத்துக்கு அப்பால் ஓர் அண்டம் ஆகி
எண் ஆகி எண்ணுக்கு ஓர் எழுத்தும் ஆகி
எழும் சுடராய் எம் அடிகள் நின்ற வாறே.

கல் ஆகிக் களறு ஆகிக் கானும் ஆகிக்
காவிரியாய்க் காலாறாய்க் கழியும் ஆகிப்
புல் ஆகிப் புதல் ஆகிப் பூடும் ஆகிப்
புரம் ஆகிப் புரம் மூன்றும் கெடுத்தான் ஆகிச்

சொல் ஆகிச் சொல்லுக்கு ஓர் பொருளும் ஆகிச்
சுலாவாகிச் சுலாவுக்கு ஓர் சூழல் ஆகி
நெல்ஆகி நிலன் ஆகி நீரும் ஆகி
நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே.

காற்று ஆகிக் கார்முகில் ஆய்க் காலம் மூன்றாய்
கனவு ஆகி நனவு ஆகிக் கங்குல் ஆகிக்
கூற்று ஆகிக் கூற்று உதைத்த கொல் களிறும் ஆகிக்
குரைகடலாய்க் குரைகடற்கு ஓர் கோமா னும் ஆய்
நீற்று ஆனாய் நீறேற்ற மேனி ஆகி
நீள்விசும்பாய் நீள்விசும்பின் உச்சி ஆகி
ஏற்று ஆனாய் ஏறு ஊர்ந்த செல்வன் ஆகி
எழுஞ்சுடராய் எம் அடிகள் நின்ற வாறே.

தீ ஆகி நீர் ஆகித் திண்மை ஆகித்
திசை ஆகி அத்திசைக்கு ஓர் தெய்வம் ஆகித்
தாய் ஆகித் தந்தையாய் சார்வும் ஆகித்
தாரகையும் ஞாயிறும் தண் மதியும் ஆகிக்
காய் ஆகிப் பழம் ஆகிப் பழத்தில் நின்ற
இரதங்கள் நுகர்வானும் தானே ஆகி
நீ ஆகி நான் ஆகி நேர்மை ஆகி
நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே.

அங்கமாய் ஆதியாய் வேத மாகி
அருமறையோடு ஐம்பூதம் தானே ஆகிப்
பங்கம் ஆய்ப் பலசொல்லும் தானே ஆகிப்
பான்மதியோடு ஆதியாய்ப் பான்மை ஆகிக்
கங்கையாய்க் காவிரியாய்க் கன்னி யாகிக்
கடல் ஆகி மலைஆகிக் கழியும் ஆகி
எங்குமாய் ஏறூர்ந்த செல்வன் ஆகி
எழுஞ்சுடராய் எம் அடிகள் நின்ற வாறே.

மாதா பிதாவாகி மக்கள் ஆகி
மறிகடலும் மால்விசும்பும் தானே ஆகிக்
கோதாவிரியாய்க் குமரி ஆக்
கொல்புலித்தோல் ஆடைக் குழகன் ஆகிப்
போதாய மலர்கொண்டு போற்றி நின்று
புனைவார் பிறப்பு அறுக்கும் புனிதன் ஆகி
யாதானும் எனநினைந்தார்க்கு எளிதே ஆகி
அழல்வண்ண வண்ணர்தாம் நின்ற வாறே.

ஆவாகி ஆவினில் ஐந்தும் ஆகி
அறிவு ஆகி அழல் ஆகி அவியும் ஆகி
நாவாகி நாவுக்கு ஓர் உரையும் ஆகி
நாதனாய் வேதத்தின் உள்ளோன் ஆகிப்
பூவாகிப் பூவுக்கு ஓர் நாற்றம் ஆகிப்
பூக்குளால் வாசமாய் நின்றான் ஆகித்
தேவாகித் தேவர் முதலும் ஆகிச்
செழுஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்ற வாறே.

நீராகி நீள அகலம் தானே யாகி
நிழலாகி நீள்விசும்பின் உச்சி ஆகிப்
பேராகிப் பேருக்கு ஓர் பெருமை ஆகிப்
பெருமதில்கள் மூன்றினையும் எய்தா னாகி
ஆரேனும் தன் அடைந்தார் தம்மை எல்லாம்
ஆட்கொள்ள வல்ல எம் ஈச னார் தாம்
பாராகிப் பண் ஆகிப் பாடல் ஆகிப்
பரம் சுடராய்ச் சென்றடிகள் நின்ற வாறே.

மாலாகி நான்முகனாய் மா பூதமாய்
மருக்கமாய் அருக்கமாய் மகிழ்வும் ஆகிப்
பாலாகி எண்டிசைக்கும் எல்லை ஆகிப்
பரப்பாகிப் பரலோகம் தானே ஆகிப்
பூலோகப் புவலோக சுவலோகம் ஆய்ப்
பூதங்க ளாய்ப் புராணன் தானே ஆகி
ஏலாதன எல்லாம் ஏல்விப்பான் ஆய்
எழுஞ்சுடராய் எம் அடிகள் நின்ற வாறே.

# பின்னர்
# பாம்பன் சுவாமிகள் அருளிய
# “குந்துகால்”
# படனம் செய்ய வேண்டும்.

1

(தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தந்தனன தந்ததான)

அம்பு உதம் நிறைந்து விரி வெண்திரை உலம்பு விழு
மம் பெருகு குந்துகாலில்
அந்தணர் விரும்பு மலர் தந்திடு மரம் பல
அடர்ந்திட வளம் பொயாத
பம்பரம் உறழ்ந்து அவிர் குரும்பைகள் தரும் சிறு
பசுந்தழை செறிந்த கேளி
பம்பி நிழல் தந்திட அமைந்த தளியின் கணை
படும் சடை நிலம் துழாவச்
செம்பு நிற அம்பரம் அணிந்து கரம் ஒன்றில் ஒரு
தெண்டு அது விளங்க வாசச்
செங்கழலில் ஒண் குறடு இலங்க அளி அன்பர்கள்
தினம் தினம் இறைஞ்சி வாழச்
சம்ப்ரமம் உடன் திகழ் அருந்தவன் இரும்பரம
சங்கரி பயந்த சூர
சண்டன் முருகன் குமரன் என்று தொழுகின்றவர்கள்
சஞ்சலம் அகன்று போகும்.

2

**(தன்னத்த தத்ததன தன்னத்த தத்ததன தன்னத்த தத்ததன)**

கம்மல் சிமிக்கி மிலை மென்மெய்ப் பரத்தையர்கள்
கண்மைக்கு அகன்று மோக
கன்மப் பவக் கவையை உண்மைப் பதத்து இறைமை
கண்ணிச் சிறந்த வீர
அம்மைக் கடுத்தலையின் உன்னித் தறிக்கும் உரம்
அண்ணிக் கடிந்து அறாத
அந்நிற்க மெய்ப்பரம நன்மைப் பயிர் செயும்
நலன் மக்கள் வந்து சேரும்
செம்மைச் சிவப்பு இதழி மென்முள் கடுக்கை புனை
தென் மொய்த்த குந்துகாலில்
சின்முத்திரைக் கரம் உடன் மத்தகச் சடை
நிலன் முட்ட நின்ற தேவை
இம்மைக்கண் உற்று இறுதியில் முற்று அளிக்கும் இறை
எம்மைக்கொள் அந்த காரி
இன்மைத் துனிக்கு முருகு எண்ணத் துதிப்பர் துயர்
எண்ணிப் பறந்து போகும்.

3

**(தனதனன தானதன தனதனன தானதன தனதனன தானதனனா)**

அமரர்களை ஏவல் கொள்ள அதிவலிமை சால் நிருதர்
அற ஓர் கணை ஏவும் விறலோன்

அனலி இன மீளி தவ வியன் மருவு இராகவனது
அணை எனும் ஓர் சேது இடையே
விமல விரை மாமலர்கள் அவிழும் அடர் கா நிறையும்
விரதர் குவிகாலின் அரி தீர்
விசதம் மலி நீறு உருவம் முழுது நனி தோய எழில்
விளை விரத வேடம் ஒடு வாழ்
சுமவதன மாமுனியை அரிமருக வேல் முருக
சுரர் நரர்கள் மாதவர்கள் தாம்
தொழ மிளிறு நீல ஞமலியில் இவரும் ஈச அறு
சுடரும் ஒரு சோதி வடிவாக்
குமரகுரு தாசன் நிதம் வழிபடு சுரேச சிவ
குருபர சுவாமி எனவே
குணமொடு சதா நணுகி அடிபரவு மானுடர்கள்
குறை கடுகி ஓடியிடுமே.

**4**

**(தனதாந்த தந்தனா தனதாந்த தந்தனா
தனதாந்த தந்ததான)**

முடிபூண்ட மண்டலீ கரும் மாண் தொழும்பர் ஊன்
முடை மாந்துகின்ற பேயின்
முகையாம் கணங்களோடு அருள் மாந்து அரும்பையார்
முனியாண்டியும் பனாளும்
அடியாம் பதங்களே தொழ ஊங்கு அலர்ந்த பூ
அணிவேய்ந்து இலங்குவேணி

அதுதான் துலங்கவே அணி சான்ற செங்கை மீது
அடல் சேர்ந்த தண்டம் ஒடு
வடிவு ஏய்ந்த வண்டு பாடு அடர் பூங்கடம் சதா
வளர் பாம்பன் என்ற தீவுள்
மடல் நீண்ட கந்த கேதகை ஈந்து சம்புமா
மணல் ஓங்கு குந்துகாலில்
குடி ஆண்டு அமர்ந்ததே வனை ஆம்பல் அந்தண் ஆர்
குழை நான்ற கொன்றை சூடும்
குழகு ஆர்ந்த ஒண்கணாள் பொருள் சேந்தன் என்று உளே
கொளும் மாண்பர் துன்பு போகும்.

**5**

**(தத்தான தந்தத்த தத்தான தந்தத்த
தத்தான தந்தந்தனா)**

உப்பு ஏறு சிந்துத் திரைத் தூவல் விஞ்சிப் பொன்
ஒப்பாய் மலிந்து எங்குமா
ஒப்பு ஏறு மண் திட்டு உறச் சேது அரங்கிற்கு
அண் உள்கா இரும் குந்துகால்
எப்போதும் நன்கு உற்றிடக் காவல் கொண்டு அத்த
எஃகோடு இயங்கும் பிரான்
எட்டு ஏறு பந்தக் குழுப் பாற அன்பர்க்குள்
எக்காலமும் தங்குவோன்
அப்பாவு சந்தத்தில் இப்பா விளம்பிக்கொள்
அத்தா எனும் கந்தவேள்

அஃகாத இன்பத்து அருள் தேவன் என்று உள் கொள்
அச்சோடு இறைஞ்சு அன்புளோர்
தப்பாது துன்பு அற்று இமிழ்ப்பா இனம் சொற்ற
தக்கோன் உரம் கண்டு அரோ
சற்போத சம்பத்து மெய்ப்போகமும் பெற்றார்
சத்தாவர் இங்கு அங்குமே.

**நிறைவாக மறுபடியும் திருக்குறளில்,**
**“மெய் உணர்தல்”**
**அதிகாரம் படனம் செய்ய வேண்டும்.**

பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும்
மருளான் ஆம் மாணாப் பிறப்பு.

இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி
மாசறு காட்சி அவர்க்கு.

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து.

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம் இன்றே
மெய் உணர்வு இல்லாதவர்க்கு.

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்று ஈண்டு வாரா நெறி.

ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்து உள்ள வேண்டா பிறப்பு.

பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்
செம்பொருள் காண்பது அறிவு.

சார்பு உ ணர்ந்து சார்பு கெட ஒழுகின் மற்று அழித்துச்
சார்தரா சார்தரும் நோய்.

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

***இத்துடன் பூஜை நிறைவுற்றது***

## பதிகக் குறிப்புகள்

### திருக்குறள்

கர்ம வினை பற்றிய குறிப்புகளுக்காக, அதை அந்த உயிர் உணரவும் நாம் உணர்ந்து மனம் திருந்தவும், முதலில் திருக்குறளில் ஊழ் என்ற அதிகாரம் படனம் செய்ய வேண்டும்.

### திருவிளமர் திருப்பதிகம்.

இந்த திருக் கோயிலில் சுவாமி திருப்பாதம் இருக்கிறது பிட்ரு தோஷம் அல்லது சாபம் உள்ளவர்கள் இந்த கோவிலில் அன்னாபிஷேகம் செய்து அல்லது வசதி இல்லாதவர்கள் தரிசனம் செய்து, அங்கு தரும் உணவை மட்டும் சாப்பிட்டு அதன் பின் அங்கே தரும் பிரசாட்தை வீட்டில் வைட்திருந்து பாருங்கள் அடுட்த அமாவாசைக்குள் மாற்றம் வரும். இங்கு மட்டும் தான் ஐப்பசி அமாவசை தவிர அனைட்து அமாவசை அன்றும் அன்னாபிஷேகம் செய்வார்கள்.

### நின்ற திருட்தாண்டகம்

இது சஞ்சித கர்ம குவியலினை நீக்க. சைவ வேதம் என்று போற்றக் கூடிய பன்னிரு திருமுறைகளில், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய தேவாரட்தில், "நின்ற திருட்தாண்டகம்" எனும் பகுதி வடமொழியில் அமைந்த

ஸ்ரீருத்ரத்தின் பலன் தரும் தமிழின் நேர் வடிவம் என்று ஆய்வாளர்கள் போற்றி மதிக்கின்றார்கள்.

## குந்துகால்

சாப வினையால் செய்வினை தொடராமல் இருக்க குந்துகால். இறைவனே எல்லாம் என்ற குறிப்பை வேண்டுதாலாக சொல்ல குந்துகால் பதிகம். யாராவது அஷ்டகர்மம் கொண்டு நம் வளர்ச்சியை தடுக்க முடியுமா என்று கேட்டால் அது போல உள்ளவர்கள் பாம்பன் சுவாமிகள் அருளிய 'குந்துகால்' படித்தால் போதும். செய்வினை வந்தவர்களை திருநீறில் வரவழைத்து அவர்களை நினைத்து. படித்தால் கூட செய்வினை பில்லி தொடராது. இதன் அற்புதம் நாள் முழுதும் சொல்லலாம்.

## திருக்குறள்

நிறைவாக மீண்டும் திருக்குறளில் மெய் உணர்தல் இது திருவடி பேறுக்கு இனி பிறவி வேண்டாம் என முறையீடு செய்தல்.

இந்த பூஜையினை முழுமையாக செய்ய 50 நிமிடங்கள் முதல் 90 நிமிடம் வரை ஆகும். இதில் பண செலவு இல்லை. ஐயர் சரியாக செய்ய வில்லை என்ற குறை இல்லை. கலப்படமான உணவு படையல் இல்லை. அதனால் மனமும் நிறைவாக இருக்கும்.

# ஆசிரியர் குறிப்பு



விசு அய்யர் தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில் உள்ள சிறப்பு மிக்க சிவகங்கை சீமையில் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி என இந்துக்களால் கொண்டாடப்படும் கண்ணன் பிறந்த நன்நாளில், உலக எழுத்தறிவு தினமாக இப்போது இந்தியாவில் கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.

வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியிலும்,. தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியிலும் வெற்றி பெற்றவர். சித்தாந்த ரத்தனா, திருவருட் செல்வர், கைரேகை கலைஞன், போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்குரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில் உணவிலும் உணர்விலும் இயற்கையோடு இயைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர் .

பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவதிருமுறைகளில் மிகுந்த ஈடுபாடு உடையவர். வார மற்றும் மாத இதழ்கள் மற்றும் பல ஆய்வு கட்டுரைகளும் பதிப்பித்து உள்ளார். அரிமா சங்கம், சுழற்சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றங்களில் போன்ற பல இடங்களில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் இளைஞராகவே இருகின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெய்யில் உர்த்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

இவரின் எண்ண கருத்துக்களை நூலாக்கி படைப்பதில் பதிப்பாளராக பெருமை கொள்கிறோம்.

- பதிப்பாளர்

# இணை ஆசிரியர் குறிப்பு

அடி முடி தேடிய மால் அயன் காணாத திருமுடி தாங்கிய கொடுமுடி கொங்கு நாட்டின் போற்றத்தக்க தலம். அத்தலத்தில் உள்ள கிராமத்தில் கண்ணன் உயர்வாக பேசும் மார்கழியில் இந்த பொன்தாமரைக்கண்ணன் பிறந்தவர்.



ஜோதிடம், வாஸ்து, அதிர்ஷ்ட ரத்தினம் எண்கணிதம் போன்ற பல துறைகளில் வித்வத்வம் பெற்ற இவரிடம் இந்தியா மற்றும் வெளிநாடுகளில் பல ஆயிரக்கணக்கான அன்பர்கள் ஆலோசனை பெறுகிறார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

" ஸ்ரீராம் ஜோதிடம்" மின்னிதழின் ஆசிரியராக உள்ள இவர், நக்கீரன் குழுமத்தில் இருந்து வெளிவரும் " இந்த வார ஜோதிடம்" உட்பட்ட பல ஜோதிட இதழ்களில் கட்டுரைகள் எழுதி வருவது வாசகர்களை வெகுவாக கவர்ந்துள்ளது என்பதை இவர் ஆய்வு சிந்தனையை உணர்ந்தவர்கள் தெரிந்து கொள்வார்கள். பரிகாரங்கள் எப்படி செயல் படுகிறது என்பதனை பற்றிய இவரது ஆய்வுகள் சிறப்பானவை.

இவரின் blogs, facebook பதிவுகள் மற்றும் youtube சானல் இவரின் ஆய்வு பதிவுகளுக்கு சான்றாக நின்று விளங்குகிறது. அவை பல ஆயிரம் நண்பர்களின் like மற்றும் மீள் பதிவுகளுமே இவைகளுக்கு கட்டியம் கட்டி நிற்கும். இவரின் whats app பதிவுகள் இணைப்பில் உள்ள ஒவ்வொருவரையும் அண்ணாந்து பார்க்க வைக்கும் என்பதை குழுவில் உள்ள சக சோதிடர்கள் பார்த்து வியப்பார்கள். எந்த இயல்பு சூழ்நிலைகளையும் சோதிடத்துடன் இணைத்து சிந்திக்கும் இவர் அறிவு திறன் பாராட்டுக்குரியது.

தமிழகத்தின் பல அமைப்புகளில் ஜோதிட சொற்பொழிவுகள் அளித்து வரும் இவர் மிக எளிதான கணக்கில்லா புரிதல் முறை ஜோதிட ஆசிரியராகவும் இருப்பது சோதிட உலகம் செய்த நல்வினை பயனே என்பதில் ஐயமில்லை.

- பதிப்பாளர்

## ஸ்ரீ ராம் ஜோதிட கேந்திரா

தனி நபர் சோதிட ஆலோசனை,
அதிர்ஷ்ட பெயர் மாற்றம்,
எண் கணித ஆலோசனை,
நவரத்தினக் கற்கள் மற்றும்
அதிர்ஷ்ட ரத்தினங்கள்
தினமும் காலை 9 மணி முதல் மாலை 5 மணி வரை
அலைபேசி 7667745633
மின்னஞ்சல் sriraamjothidam@gmail.com

## ஸ்ரீ ராம் வாட்ஸ்அப் குழு

வளரும் சோதிடர்களை ஊக்குவிக்கும்
தனிநபர் குழு. இதில் தினமும் சோதிட அரங்கம்,
சோதிட சிந்தனைகள், ஆய்வரங்கம்,
ஆலோசனை அரங்கம், சோதிட பட்டி மண்டபம்,
சோதிடர்களை கவுரவித்தல் தினமும்
இரவு 8 மணி முதல் 10 மணி வரை
அலைபேசி7667745633

## ஸ்ரீ ராம் சானல்

சோதிட சிந்தனைகள், ஆலோசனைகள்
ஒவ்வொரு திங்கள் அன்றும்
அலைபேசி7667745633
மின்னஞ்சல் sriraamjothidam@gmail.com

## ஸ்ரீ ராம் சோதிட பயிற்சி மற்றும் ஆராய்சி மையம்

ஆன்லைன் வழி ஜோதிடப் பயிற்சிகள்.
கணிதமில்லா கணக்கு முறை. பயிற்சி பெறும் ஒவ்வொருவரும் பலன் சொல்லும் திறன் பெறுதல் சிறப்பு அம்சமாகும்
அலைபேசி **7667745633**
மின்னஞ்சல் astrokanna@gmail.com

## ஸ்ரீ ராம் ஜோதிடம் மின்னிதழ்

சோதிட தகவல்கள் பரிகார குறிப்புகள்
தாங்கி வரும் மாத இதழ்
ஒவ்வொரு நிறைமதி நாளிலும்...
அலைபேசி**7667745633**
மின்னஞ்சல் sriraamjothidam@gmail.com

## ஸ்ரீராம் பதிப்பகம்

அனைத்து பிரிவு சோதிடம் ஆன்மிகம் மற்றும் தன்னம்பிக்கை புத்தகங்களை மின் பிரதியாக வெளியிடும் பதிப்பகம்
தினமும் காலை 10 மணி முதல் 5 மணி வரை
அலைபேசி**7667745633**
மின்னஞ்சல் astrokanna@gmail.com

